# கல்கி

KALKI 1.3.92 ரூ. 3.00

பொன்விழா ஆண்டு



- அடிக்கடி நடக்கும் கோஷ்டிச் சண்டைகள்!
- ஸ்வரம் பாடும் குழந்தை
- ம.சு.பல்கலைக் கழகம் கின்னஸில் இடம் பெறுமா?
- தாமிரபரணியை அசுத்தமாக்கும் கட்டபொம்மன் போக்குவரத்துக் கழகம்
- கலெக்டர் பேட்டி...

## நெல்லை நகரச் சிறப்பிதழ்

# இயற்கை முறையில் கொசுக்கடியிலிருந்து விடுதலை



பலவித வியாதிகளுக்கு காரணமான கொசுக்கடியிலிருந்து ஆரோக்யமான முறையில் சிக்கன வழியில் நிவாரணம் பெற உபயோகிப்பீர் ''கொசுவலை'' - அதுவும் எமது ''குவாலிடி'' கொசுவலை என்றால் இருமடங்கு உழைப்பு, இருமடங்கு பாதுகாப்பு.

★ நீடித்த உழைப்புக்கு உறுதி செய்கிறது இறக்குமதி செய்யப்பட்ட HDPE நூல்.

★ மிகவும் நெருக்கமான பின்னல்களினால் பெறுவது பரிபூரண பாதுகாப்பு.

★ நெருக்கமான பின்னல்கள் இருந்தாலும் மிகவும் காற்றோட்டமானது.

★ ரசாயன பொருட்களடங்கிய கொசு விரட்டிகளை உபயோகிப்பதால் ஏற்படும் கண்வலி, தலைவலி, மயக்கம், நெஞ்செரிச்சல் போன்ற உபாதைகள் நிச்சயமாக இல்லை.

★ தொடர் செலவுகள் இல்லை.

★ குவாலிடி கொசுவலைகள் பிரின்ஸ் (சிங்கிள் காட் சைஸ்), குயின் (டபுள் காட் சைஸ்) மற்றும் கிங் (சூப்பர் டபுள் காட் சைஸ்) என மூன்றுவித அளவுகளில் பலப்பல வண்ணங்களில் கிடைக்கிறது.

★ எளிதில் கையாளக்கூடியது. நீங்கள் வாங்கக்கூடிய விலையில் தமிழகமெங்கும் இப்பொழுது கிடைக்கிறது.

## "குவாலிடி" கொசுவலைகள்

குவாலிடி கொசுவலையை உபயோகியுங்கள்.
குவாலிடி கொசுவலையை உணருங்கள்.

தயாரிப்பாளர்கள் :

**குவாலிடி பிளமண்ட்ஸ்**

(குவாலிடி கொசுவலை தயாரிப்பாளர்கள்)

த.பெ. எண் : 14 40, சின்னாண்டாங் கோவில் வீதி, கரூர்-639 001

வியாபார விசாரணைகள் வரவேற்கப் படுகின்றன.

## புதிய மந்திரி நாகூர்மீரான் :

முகமது ஆசிப்புக்குப் பதிலாக, புதிதாக ஊரகத் தொழில் மந்திரியாக நியமிக்கப்பட்டிருக்கிறார் நாகூர் மீரான். 29 வயதான இவர், அமைச்சரவையிலேயே ஜூனியர். நெல்லையைச் சேர்ந்தவர்.

மந்திரியானவுடன் அரசு விருந்தினர் விடுதியில் தங்கியிருந்த மீரானைச் சந்திக்கச் சென்றோம். மாலைகள், சால்வைகள் எடுத்துக் கொண்டு தொண்டர்களும், பிரமுகர்களும், வந்து கொண்டே இருந்தனர். ''எனக்கெதுக்கு இதெல்லாம். அம்மா (ஜெ)க்குத் தானே போடணும்'' என்று சங்கோஜத்துடன் அவைகளை ஏற்றுக் கொண்டார் மீரான். நான்கு வார்த்தை

# நெல்லைக்கு மட்டும் நான் மந்திரியல்ல!

பேசினால் குறைந்தபட்சம் இரண்டு வார்த்தைகள் 'அம்மா'!

மீரானிடமிருந்து, கேள்விகளுக்கான பதில்கள், மிகவும் தயக்கத்துடனேயே வருகின்றன.

''1979-ல் நான் ப்ளஸ் டூ படிக்கும் காலத்திலிருந்தே எம்.ஜி.ஆர். அனுதாபி. அ.தி.மு.க. கூட்டங்கள் எங்கு நடந்தாலும் போவேன். 1982ல், தலைவர் அம்மாவை அரசியலில் அறிமுகப்படுத்தியதிலிருந்தே நான் அம்மாவோட தொண்டன்தான்'' என்கிறார்.

மீரானுக்குச் சொந்த ஊர், குற்றாலம் அருகில் இருக்கும் வடகரை. தென்றல் தாலாட்டும் ஊர். விவசாயக் குடும்பம். மீரான்தான் குடும்பத்தில் மூத்த பிள்ளை. அவருக்குக் கீழ் ஒரு தம்பி, நான்கு தங்கைகள். மீரான் உட்பட அவர்களில் யாருக்கும் திருமணம் ஆகவில்லை.

''எங்கள் குடும்பம் நடுத்தர விவசாயக் குடும்பம்தான். வடகரையில் பள்ளிப் படிப்பை முடித்து விட்டுப் பாளையங்கோட்டையிலுள்ள சதக்கத்துல்லா கல்லூரியில் சேர்ந்தேன். எம். ஏ. முடித்துவிட்டு, கரெஸ்ஸில் (Correspondence) பி. எட். படித்தேன். ஆசிரியர் ஆக வேண்டும் என்ற ஒரு லட்சியம் இருந்தது. ஏற்கெனவே அ. தி. மு. க. மேடைகளில் பேசிக் கொண்டு, கழகத் தொண்டனாக இருந்த என்னை எம். எல். ஏ. ஸீட் கொடுத்து, இப்போது மந்திரி பதவியையும் கொடுத்து, முழு



நேர அரசியல்வாதியாக மாற்றியிருக்கிறார் அம்மா. அவர் எதிர்பார்ப்புக்கு ஏற்றபடி நடப்பேன்'' என்கிறார் மீரான்.

மீரானுடன் 'நாகூர்' சேர்ந்திருப்பதால் பலர் சொந்த ஊர் நாகூரா?' என்று கேட்கிறார்களாம். ''எங்கள் தாத்தா பெயர் நாகூர் மீரான். அவர் பெயர்தான் எனக்கும் வைத்திருக்கிறார்கள். நாகூர் இஸ்லாமியர் களுக்குப் புனித ஊர் அல்லவா? அதனால் தான் பெயருடன் சேர்த்து வைத்திருக் கிறார்கள்'' என்கிறார் மீரான். கல்லூரியில் படிக்கும் காலத்தில், லீவில் ஊருக்கு வந்தால் கலப்பை பிடித்து உழுவாராம் மீரான்.

1989ம் ஆண்டு, வடகரையில் அ. தி. மு. க. பொதுக் கூட்டத்தில் கலந்து கொண்டு பேசிய இவரை, போலீஸ் கைது செய்து, ஜாமீனில் வெளிவர முடியாத குற்றங்களைச் சுமத்தியது. ஒரு வாரம் பாளை சிறையில் இருக்க வேண்டி யிருந்தது. ''எல்லாம் உள்ளூர் தி. மு. க. காரர்களின் வேலை. என்னை மட்டுமல்ல; என் தம்பியையும் பிடித்துப் போட்டு விட்டனர்'' என்கிறார் அமைச்சர்.

'மதம்' பற்றி மந்திரிக்குத் தீவிரமான கருத்து எதுவும் கிடையாது. 'மனிதனை மனிதனாக்கும் எம்மதமும் சம்மதம்தான். இன்னமும் சொல்லப் போனால் மனித குலத்தில் ஆண் - பெண் என்ற வேற்றுமை தவிர, வேறொன்றும் இருக்கக் கூடாது'' என்று சொல்கிறார் அமைச்சர். சமீபத்தில் மகாமகத்துக்கும் சென்றார் இவர்.

''தொகுதிக்கு ஏதாவது வாக்குறுதிகள் கொடுத்திருக்கிறீர்களா?''

''வாக்குறுதி எதுவும் கொடுக்க வில்லை. ஆனால் குடிதண்ணீர்ப் பிரச்னை இருக்கும் ஊர்களில் அவற்றைத் தீர்த்து வைத்தேன். சாலைகள் பல போடப்பட் டிருக்கின்றன. அடவிநைனார் என்ற ஆற்றுக்குக் குறுக்கே அணை கட்ட இருக் கிறோம். அந்த வேலையைத் துரிதப்படுத்த வேண்டும்.''

சட்டம் ஒழுங்கு கெட்டு விட்டது என்று சொல்லி, முன்பு அ. இ. அ. தி. மு. க. நடத்திய சாலை மறியலில் கலந்து கொண்டும் சிறை சென்றிருக்கிறார் மீரான்.

''இரண்டு நாட்கள் இருந்து விட்டு வெளியே வந்தேன். அடுத்த நாள் தி.மு.க. அரசே டிஸ்மிஸ் செய்யப்பட்டு விட்டது!''

''காதல் வலையில் சிக்கியதுண்டா?'' என்று கேட்டவுடன் மெலிதான சிரிப் புடன், ''எனக்கெங்க ஸார் நேரம்? நான் படித்த கல்லூரியும் கட்டுப்பாடான கல்லூரி. மேலும் சதா பொது மக்கள் பிரச் னைகளைப் பற்றியே சிந்தித்துக் கொண் டிருப்பவனுக்கு அதிலெல்லாம் புத்தி போகாது'' என்கிறார் மீரான்.

''திருநெல்வேலி மாவட்டம் தொழில் வளத்தில் பின்தங்கியிருப்பதாகப் பரவ லாகக் குறைபட்டுக் கொண்டிருக்கிறார் களே?''

''எனக்கும் அந்தக் குறை உண்டு. என்னால் முடிந்ததைக் கண்டிப்பாகச் செய் வேன். ஆனால் நெல்லைக்கு மட்டும் நான் மந்திரி அல்ல. தமிழ்நாடு பூராவும் கவ னிக்க வேண்டும். அது மட்டுமல்லாமல் புரட்சித் தலைவி எங்கள் பகுதிகளில் பல நாட்கள் சுற்றுப் பயணம் செய்திருக்கிறார். எங்கள் தேவை என்னவென்று அவருக்குத் தெரியும். அவருடைய வழிகாட்டுதலின் பேரிலும் ஆலோசனையின் பேரிலும் நெல்லை மட்டுமல்ல; தமிழகமே முன் னேறப் பாடுபடுவேன்'' என்று சொல் கிறார் அமைச்சர் மீரான்.

சந்திப்பு : ப்ரியன்
படம் : ராஜன்

பம்பாய்க் கடிதம் :

# குதிரைப் பந்தயங்களில் கோல்மால்!

பல இலட்சங்கள் கைமாறும் குதிரைப் பந்தய மைதானத்தில், அநேக சதித் திட்டங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. Knight 'N' Day, Wild Honour போன்ற குதிரைகள் ஜெயிக்காமலிருக்க அவற்றின் உணவில் போதை மருந்து கலந்து கொடுக்கப் பட்டிருக்கிறது. இது சம்பந்தமாக விசாரணைக்குச் சில ரேஸ் கோர்ஸ் அலுவலர்களைப் போலீஸார் அழைத்துச் சென்ற போது, அதை ஆட்சேபித்து எல்லா அலுவலர்களும் வேலை நிறுத்தம் செய்தனர். இதனால் வியாழன், ஞாயிறு தினங்களில் நடக்கவிருந்த குதிரைப் பந்தயங்கள் ரத்து செய்யப்பட்டன. மாதம் ரூபாய் 2000 - க்கும் குறைவாகச் சம்பளம் வாங்கும் ஒரு ரேஸ் கோர்ஸ் அலுவலர், பம்பாயில் ஒரு பங்களாவும், மூன்றுஃப்ளாட்டுகளும் வாங்கியிருப்பதைச் சுட்டிக்காட்டுகிறது போலீஸ். குதிரைப் பந்தயத்தை ஒரு தொழிலாகக் கருதி, அரசு இதில் ஒழுங்கு முறையைக் கொண்டு வர வேண்டும் அல்லது ஒழித்து விட வேண்டும் என்கின்றனர் பலர்.



✤ நேமிஷ் ஷா

## பங்கு மார்க்கெட்டின் பெரும்புள்ளிகள் :

அனேகர் இன்று பங்கு மார்க் கெட்டில் காலடி எடுத்து வைக்கக் காரண மாக இருப்பவர்கள் ஹர்ஷத் மேத்தா, நேமிஷ் ஷா என்ற இரு பம்பாய் இளை ஞர்கள். 12 ஆண்டுகளுக்கு முன் ரூ 2000 சம்பளத்தில் வாழ்ந்த ஹர்ஷத், இன்று இந்தியாவிலேயே அதிக வருமான வரி கட்டப் போகும் பெரும்புள்ளி. சென்ற ஆண்டு அதிக வரி கட்டியவர் நடுத்தர வர்க்கத்திலிருந்து வந்த நேமிஷ் ஷா. இவர்கள் ஒவ்வொருவரது ஆண்டு வருமானமும் இன்று 100 கோடிக்கும் மேல்! ''மூளை பலமும், செயல்திறனும் விடாமுயற்சியும் இருந்தால் பங்கு மார்க்கெட்டில் வெற்றி கிட்டுவது நிச்சயம்'' என்கின்றனர் இவர்கள்.

## மின் துண்டிப்பு படுத்திய பாடு

தடங்கலின்றி மின் சப்ளை செய்வதில் மற்ற மெட்ரோ நகரங்களை விட பம்பாய் திறம்பெற்றது. ஆனால் பிப். 12 ஆம் நாள் பம்பாய் எலக்ட்ரிசிடி போர்டு பம்பாய் வாசிகளுக்கு ஒரு 'ஷாக்' கொடுத்தது. ஏறக்குறைய ஐந்து மணி நேர மின் துண்டிப்பால் பம்பாய் ஸ்தம்பித்து விட்டது. மின் ரயில்கள் ஓடாததால் இருபது லட்சம் பயணிகள் அங்கங்கே நின்று விட்டனர். கம்ப்யூட்டர்கள் வேலை செய்யாததால் ரயில், ஏர் ரிசர் வேஷன் கௌண்டர்களில் குழப்பம். மொத்த நஷ்டம் பல கோடி இருக்கும் எனக் கூறப்படுகிறது. நவ. 24. 1990 இல் இத்தகைய தொரு மின் துண்டிப்பு ஏற்பட, அதன் காரணத்தை ஆராய அரசு அமைத்த குழு தன் அறிக்கையை இப்போதுதான் கொடுத்திருக்கிறது. அது ஆராயப்படுவதற்குள் மற்றுமொரு துண்டிப்பு!



✤ ஹர்ஷத் மேத்தா

## பம்பாய் - நியூ பம்பாய் ரயில்வே

ஒரு தீவான பம்பாயை, மெயின் லாண்டில் வளர்ந்து வரும் நியூ பாம்பே யுடன் கடலைத் தாண்டி இணைக்கும் மான்குர்த் பேலாபுர் ரயில் திட்டம் இப்போது முடிவு பெற்று விட்டது. 17 கி.மீ. தூரமான இந்த இரட்டை லைன் மின்சார இருப்புப் பாதைத் திட்டம், புது பாம்பாயின் முக்கிய புறநகர்ப் பகுதிகளை இணைக்கும். இப் பாதை 'கர்ஜத்' ஸ்டேஷன் வரை ஏப்ரல் இறுதியில் இணையும். அப்போது பம்பாய் -புனேவுக்கு இடையிலான தூரம் 28 கி.மீ. குறையும். இது பம்பாய் - சென்னை பயணிகளுக்கும் பிரயாண நேரத்திலும், கட்டணத்திலும் சலுகைகள் கொடுக்கும். புது பம்பாய்ப் பகுதி தொழில் முறையில் வளர இந்தப் புது இருப்புப் பாதை பெரிதும் உதவும்.

— ராஜீவி நரசிம்மன்

# அடிக்கடி நடக்கும் கோஷ்டிச் சண்டைகள்!

கடைத் தெருவில் உள்ள மக்கள் சிதறி ஓடுகிறார்கள். கடைகளின் ஷட்டர்கள் கடகட சப்தத்துடன் வேகமாகக் கீழே இறக்கப்படுகின்றன. பஸ்கள் ஓரங்கட்டப்படுகின்றன. என்ன, ஏது என்பதைப் புரிந்து கொள்வதற்குள் பஸ்களுக்கோ, வேன்களுக்கோ தீ வைக்கப்படுகின்றது. 'வெட்டு, குத்து, விடாதே, பிடி, ஐய்யோ, அம்மா, அப்பா...' குரல்கள் எழுந்து அடங்குகின்றன.

இதுபோன்ற சூழ்நிலை, ஒரு வட்டாரத்தில் அடிக்கடி ஏற்பட்டால் சாதாரணக் குடிமகனுக்கு இயல்பாக வெளியே சென்று வர எப்படி தைரியம் வரும்? 'எப்போது என்ன ஆகுமோ!' என்ற பயத்துடன் தானே வலம் வர வேண்டியிருக்கும். ''செல்வாக்கான இரண்டு ஜாதிகளைச் சேர்ந்த கும்பல்கள் மோதிக் கொள்வதால் நகரின் அமைதியே கெட்டு விட்டது...'' என்று கவலையுடன் குறிப்பிட்டார்கள் திருநெல்வேலியில் எங்களைச் சந்தித்த பெரும்பாலோர். ''என்னிடம் வோட்டுக் கேட்க வந்த வேட்பாளரிடம் நான், 'நீ எங்களுக்கு எதுவும் செய்யாமல் போனாலும் பரவாயில்லை. 'கொலை செய்ய மாட்டேன்; அடிதடியில் இறங்க மாட்டேன்' என்று மட்டும் வாக்குறுதி கொடு. அது போதும். என் வோட்டை உனக்கே போட்டு விடுகிறேன்' என்றுதான் சொன்னேன். அந்த அளவுக்கு நெல்லையின் நிலைமை மோசமாகி விட்டது!'' என்றார் பாளை சண்முகம்.

இரண்டு வருடங்களுக்கு முன்னர் இன்ஜினியரிங் காலேஜ் அருகில் ஆட்டோ டிரைவர் ஒருவர் படுகொலை செய்யப்பட்டார். அதற்குக் காரணம் கராத்தே செல்வின் நாடார் என்பவரின் கோஷ்டி என்பது இறந்த ஆட்டோ டிரைவர் கோஷ்டியைச் சேர்ந்தவர்களின் கருத்து. இதன் விளைவாக அடிக்கடி மோதல்கள். பல்வேறு அடிதடி வழக்குகளில் சம்பந்தப்பட்ட செல்வின் நாடார் கோஷ்டியைக் கோர்ட்டு வளாகத்துக்குள்ளேயே நாட்டு வெடி குண்டு வீசித் தாக்கிக் கொல்ல முயற்சி நடந்தது. ஆனால் செல்வின் தப்பித்துக் கொண்டார். சில நாட்கள் கழித்து, சுப்பையா பாண்டியத் தேவர் என்பவர் கொலை செய்யப்பட்டார். செல்வின் நாடார்தான் இதற்குக் காரணம் என்று சொல்லப்பட்டது. சுப்பையா இறந்த இரண்டு நாட்களில் செல்வின் கைது செய்யப்பட்டு 'தடா'வில் உள்ளே போடப் பட்டார். அவருடன் பதினோரு பேர் தடாவில் கைது செய்யப்பட்டனர். தற்சமயம் விஷயம் இத்தோடு நிற்கிறது.

''இரண்டு ஜாதிகளைச் சேர்ந்த செல்வாக்குப் பெற்றவர்களால்தான் இந்த வில்லன் ஹீரோக்கள் வளர்க்கப்படுகிறார்கள். கராத்தே செல்வின் நாடாரை எடுத்துக் கொள்ளுங்கள். நல்ல பையன்தான். பாளையங்கோட்டை மார்க்கெட்டில்

◆ பேருந்து நிலையம் : சாசுவதமில்லாத அமைதி!



மீன் வியாபாரம் செய்து வந்தான். இன்றைக்கு கார், பங்களா என்று வசதியோடு வாழ்கிறான். அவனது இனத்தைச் சேர்ந்த பத்திரிகை அதிபர் ஒருவர் அவனை வளர்த்து வருகிறார். ஒருமுறை இந்த பத்திரிகை அதிபருக்கு, போட்டிப் பத்திரிகை ஒன்றோடு மோதல் ஏற்பட்டது. அப்போது ரவுடித்தனம் செய்யத் தயாரிக்கப்பட்டவன்தான் செல்வின். இது எப்படி வளர்ந்து விட்டது என்றால், அந்த இனத்தைச் சேர்ந்தவர்களுக் குப் பாதுகாவலன் செல்வின் ஒருவனே என்ற அள வில் வளர்ந்து விட்டது'' என்று சொல்கிறார் பாளை சண்முகம்.



✦ நரேந்திரபால் சிங் : பாராட்டுப் பெறுகிறார்.



✦ பாளை சண்முகம் : 'தடா'வைப் பயன்படுத்தியது சரியே

அதே போல் செல்வினுடன் மோதும் எதிர் ஜாதியைச் சேர்ந்தவர்கள் நெடுங்காலமாகக் கந்து வட்டி வாங்கி வசதியாக வாழ்பவர்கள். வெள்ளை வேட்டி, சட்டையுடன் என்ஃபீல்ட் மோட்டார் பைக்கில் அட்டகாசமாகச் செல்பவர்கள். 'வீரத்திற்குப் பேர் போனது எங்கள் ஜாதி' என்று காலரை உயர்த்திச் சொல்பவர்கள். ''போதாததற்கு இந்த இனத்தைச் சேர்ந்தவர்கள்தான் இன்று முதல்வருக்கு மிக அருகில் பொறுப்பான பதவிகளில் இருக்கிறார்கள். அதனால் பெற்றிருக்கும் தைரியம் வேறு. எந்தவிதமான மோதல்கள், அடிதடி, கொலைகளில் சம்பந்தப்பட்டாலும், ஒரு பிரச்னையும் இல்லாமல் தப்பித்து விடலாம் என்று நினைத்துக் கொண்டிருப்பவர்கள்'' என்று சொல்கிறார் நெல்லைப் பிரமுகர் ஒருவர்.

''என்னால் ஒன்று நிச்சயமாகச் சொல்ல முடியும். இந்த மோதல்கள் ஜாதித் துவேஷத்தின் அடிப்படையில் நடப்பவை அல்ல. இரண்டு ஜாதி மக்களும் நல்லிணக்கத்தோடு தான் பழகி வருகிறார்கள்.' இந்த மோதல்களை இரண்டு கோஷ்டிகளின் மோதல்களாகத்தான் எடுத்துக் கொள்ள வேண்டுமே தவிர, இதற்கு ஜாதிச் சாயம் பூசக் கூடாது'' என்கிறார் பாளை சண்முகம்.

''இந்த மோதல்கள் தொடர்பாக கராத்தே செல்வின் நாடார் கோஷ்டியைத் 'தடா'வில் தள்ளியது சரியா?''

''சமுதாய அமைதிக்குப் பங்கம் விளைவிக்கும் இது போன்ற செயல்களை கட்டுப் படுத்த 'தடா' பயன்படுவதை நான் வரவேற்கிறேன். இல்லையென்றால் ஜாமீனில் வெளியே வந்து, மீண்டும் வெட்டு, குத்து என்று பழி தீர்த்துக் கொள்ளக் கிளம்பி விடுவார்களே! மோதல்களில் ஈடுபட்டவர்களை மட்டுமல்ல; மூல காரணமாக இருந்து, இந்த கோஷ்டிகளை ஊக்குவிப்பவர்களுக்கும் கடுமையான தண்டனை கொடுக்க வேண்டும் என்பது என் கருத்து!'' என்கிறார் மக்கள் உரிமைக் கழகத்திலும் முக்கிய பங்கு வகிக்கும் பாளை சண்முகம்.

கலவரத்தில் ஈடுபட்ட கோஷ்டியை மிகக் குறுகிய காலத்தில் பிடித்துத் 'தடா'வில் உள்ளே தள்ளியதற்காக, மாவட்ட காவல்துறைக் கண்காணிப்பாளர் நரேந்திர பால் சிங்கை நெல்லை மக்கள் பாராட்டுகிறார்கள்.

''சாதாரண கிரிமினல் சட்டங்களால் இவர்களை ஒன்றும் செய்ய முடியவில்லை. இருமுறை குண்டர்கள் சட்டத்தில் பிடித்துப் போடப்பட்டிருக்கின்றனர், செல்வின் கோஷ்டியினர். அப்படிப் போட்டால் சட்டத்தின் சந்து பொந்துகளில் புகுந்து தப்பி விடுகிறார்கள். கலவரங்களின் மூலம் மக்களைப் பயமுறுத்தும் இவர்களைத் 'தடா'வில் போட்டது முற்றிலும் சரியே'' என்கிறார் நரேந்திரபால் சிங்.

நெல்லையில் தாற்காலிகமாக அமைதி திரும்பியிருக்கிறது. இருப்பினும் மக்கள் 'எந்த நேரத்தில் என்ன கலாட்டா ஆகுமோ' என்ற ஒருவித பயஉணர்வுடனேயே வெளியே சென்று வருகிறார்கள்.

- கௌசல்யா

ஓர் ஆச்சரியமான புள்ளி விவரம் : நான்கு ஆண்கள் கல்லூரிகள்; மூன்று பெண்கள் கல்லூரிகள்; ஒரு மருத்துவக் கல்லூரி; ஒரு பொறியியற் கல்லூரி; ஒரு பாலிடெக்னிக்; ஒரு பார்மஸி கல்லூரி; இரண்டு ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி; பெண்களுக்கான ஆசிரியை பயிற்சிக் கல்லூரி மூன்று; போலீஸ் பயிற்சி நிலையம் ஒன்று; குருடர் பள்ளி ஒன்று; செவிட் டூமைகளுக்கான உயர்நிலைப் பள்ளி ஒன்று; ஸ்டேட் போர்டு அங்கீகாரம் பெற்ற பதினாறு மேனிலைப் பள்ளிகள்; ஐந்து உயர்நிலைப் பள்ளிகள்; ஒன்பது நடு நிலைப் பள்ளிகள்; எட்டு மாநில மெட்ரி குலேஷன் மேனிலைப் பள்ளிகள்; மத்திய போர்டு அங்கீகாரம் பெற்ற மேனிலைப் பள்ளி ஒன்று; போதாததற்கு ஒரு பல் கலைக் கழகம்! இவை தவிர, மற்ற ஊர்களைப் போலவே புற்றீசல்கள் போல பல ஆங்கில நர்ஸரிப் பள்ளிகள்!

இவையெல்லாம் வேறெங்குமில்லை; இன்னும் மாநகராட்சி கூட ஆகாத நெல்லை (பாளையங்கோட்டை) நகரத் தில்தான் இருக்கின்றன.

# நெல்லை அனுபவிக்கும் தொல்லைகள்

'தமிழகத்தின் ஆக்ஸ்போர்டு' என்று அழைக்கப்படுகிறது பாளையங்கோட்டை. காரணம் தெரிய வேண்டுமா? பெட்டிச் செய்தியைப் பாருங்கள்!

''இத்தனை கல்விக் கூடங்கள் இருந் தும் சரியான போக்குவரத்து வசதி இல் லையே? உதாரணத்திற்குப் பெருமாள் புரத்தில் அமைந்துள்ள எங்கள் சாரான் தக்கர் பெண்கள் கல்லூரியை எடுத்துக் கொள்ளுங்கள்... இங்கு படிக்கும் மாணவி களில் சுமார் ஆயிரம் பேர் பஸ்ஸில்தான் வந்து போகிறார்கள். ஆனால் போதுமான எண்ணிக்கையில் பஸ்கள் விடப்படாத தால், மாணவிகள் மிகுந்த சிரமத்திற்கு உள்ளாகிறார்கள்...'' என்று சாட்சிகளாக மாணவிகள் சிலரையும் நம்மிடம் அறி முகப்படுத்தி வைத்தார் அந்தக் கல்லூரி ஆசிரியை இரா. பிச்சம்மாள்.

''எங்கள் பொறியியற் கல்லூரி தேசிய நெடுஞ்சாலையில் அமைந்திருந்தபோதும் எங்களுக்கும் சரியானபடி பஸ் வசதி கிடை யாது'' என்று அந்தக் கல்லூரி மாண வர்களும் நம்மிடம் முறையிட்டார்கள்.



மாணவ, மாணவியருக்குச் சரியான பஸ் வசதியில்லையென்றால், பொது மக்களில் பலருக்குக் குடிநீர் வசதி ஒரு பெரிய பிரச்னையாக இருக்கிறது. ''தாமிர பரணியிலிருந்து எங்கள் முனிசிபாலிட்டி குடிநீர் எடுத்து சப்ளை செய்கிறது என்றா லும், பல சமயங்களில் மோட்டார் ரிப்பேர் அது இது என்று குழாய்களில் தண்ணீரே வருவதில்லை!'' என்றார் மேலப்பாளை யத்தைச் சேர்ந்த திருமதி மகமூதா.

''இங்குள்ளவர்களில் பலர் பீடி சுற்றிப் பிழைப்பவர்கள். ஒருநாள் முழுவதும் அதே வேலையாகச் சுற்றினால்தான் ஆயி ரம் பீடி சுற்றலாம். அதற்குப் பதினாறு ரூபாய் கிடைக்கும். இடையில் தண்ணீருக் காகக் குடத்தைத் தூக்கிக் கொண்டு அலைந் தால் எப்படிப் பீடி சுற்ற முடியும்? இந்த லட்சணத்தில் ஆறு ரூபாயாக இருந்த

◄ திருமதி மகமூதா : ''பீடி சுற்றினால்தான் பிழைப்பு!''

தண்ணீர் வரியைப் பதினைந்து ரூபாயாக உயர்த்தி விட்டார்கள்!'' என்றார் மேலப்பாளையத்திலுள்ள இஸ்லாமிய இளைஞர் பேரவையின் துணைத் தலைவர் செய்யது அலி.



நியாகராஜ நகர் : இன்னும் மூடப்படாத பள்ளம்

இதே நிலைதான் மற்ற புறநகர்ப் பகுதிகளான தியாகராஜ நகர், டி. வி. எஸ். நகர் போன்ற பகுதிகளிலும். ''குடிநீர்ப் பிரச்னை காரணமாகத்தான் நாங்கள் தியாகராஜ நகரிலிருந்து பெருமாள்புரத்துக்குக் குடிபெயர்ந்து வந்தோம்!'' என்றார் எழுத்தாளரான திருமதி தமயந்தி.

''எங்கள் தியாகராஜ நகரில் ஐயாயிரம் வீடுகள் உள்ளன. பாளையங்கோட்டை நகராட்சியை ஒட்டி இருந்தாலும் எங்கள் பகுதி இன்னமும் வி. எம். சத்திரம் பஞ்சாயத்தில்தான் இருக்கிறது. ஏன் நகராட்சியோடு இணைக்கப்படவில்லை? பஞ்சாயத்தில் கேட்டால், நகராட்சியினர் பக்கமும் நகராட்சியைக் கேட்டால் பஞ்சாயத்தினர் திக்கிலும் கையைக் காட்டி வருகிறார்களே தவிர, யாரும் நடவடிக்கை எடுப்பதாகத் தெரியவில்லை.

''எனவே, நாங்கள் இன்னமும் நிலத்தடி நீரை நம்பித்தான் உள்ளோம். போர் போட்டால் இரண்டு ஆண்டுகள் வரை ஓரளவுக்கு நல்ல நீர் கிடைக்கிறது. அதன் பிறகு நாட்கள் செல்லச் செல்ல உப்பு நீராகி விடுகிறது. ஆண்டவன் மேல் பாரத்தைப் போட்டு விட்டு அந்த நீரைத்தான் குடிக்க வேண்டியிருக்கிறது...'' என்றார்கள் தியாகராஜ நகர் நற்பணி மன்றத்தின் துணைத் தலைவர் துரை ராஜுவும், தலைவர் சங்கர பாண்டியனும் மற்றவர்களும்.

''மாதம் ஒரு மாவட்டம் என்று எடுத்துக் கொண்டு முன்பு கல்கியில் அலசினீர்களே; அப்போது நீங்கள் வந்து பார்த்தீர்களே... சாலையின் நடுவிலுள்ள ஒரு பெரிய கிணறு போன்ற பள்ளம்... அது கூட இன்னும் மூடப்படவில்லை... வந்து பாருங்கள்!'' என்று அழைத்துச் சென்று காண்பித்தார்கள் அவர்கள்.

''ஏதோ பாளையங்கோட்டை நகராட்சிக்குள் வராத பகுதிகளில்தான் குடிநீர்க் கஷ்டம் என்று நினைத்து விடாதீர்கள். நகராட்சிக்குள் இருக்கிற ஹவுசிங் போர்டு காலனியிலும் அதே கதிதான்! எந்த நேரத்தில் குடிநீர் வருமென்றே தெரியாது. காத்துக் கிடக்க வேண்டும்...'' என்றார் தமிழ்நாடு வீட்டு வசதி வாரியத்தில் குடியிருக்கும் எம். நாராயணன். இவர் முன்னாள் நகராட்சிக் கவுன்சிலரும் கூட.

''இங்கு அறுநூறு வீடுகளைக் கட்டியிருக்கிறது தமிழ்நாடு வீ. வசதி வாரியம். விதிப்படி மருத்துவ வசதி, பார்க் வசதி, விளையாட்டு மைதான வசதி என்று எல்லாம் இருக்க வேண்டும். ஆனால் வீட்டு வசதி வாரியம் எதையுமே செய்யவில்லை. அத்தனை ஏன்? ஒரு கடிதத்தை போஸ்ட் செய்வதற்கு ஒரு தபால் பெட்டி கூட கண்ணுக்கெட்டிய தூரத்தில் கிடையாது'' என்றார் நாராயணன்.



நாராயணன் : ''எங்களுக்கும் அதே கதிதான்!''



செய்து அலி : ''தண்ணீர் வரியை உயர்த்தி விட்டார்கள்''

இவையெல்லாம் தீர்க்கப்படவே முடியாத பிரச்னைகளா? இல்லவே



''செயல் வீராக்கும், எந்தப் பிரச்னைன்னாலும் இவர்தான் முதல்ல புறப்படுவார்.''
''எதுக்கு...?''
''வேற எதுக்கு...? நிவாரண நிதி திரட்டத்தான்!''
- சீர்காழி வி. ரேவதி

இல்லை. பஸ்களில் நெருக்கடி என்றால், புதிய பஸ்களை விட வேண்டும் என்பதல்ல; கல்லூரிகள், பள்ளிகள், அலுவலகங்கள் ஆகியவற்றை ஒரே நேரத்தில் ஆரம்பிக்காமல் அரை மணி, ஒரு மணி முன் பின்னாக ஆரம்பித்தால் கூட நெரிசல் கணிசமாகக் குறைந்து போகும். ஆனால் எடுத்துச் சொல்வதற்கும் செய்வதற்கும் ஆளில்லை.

இன்னொரு யோசனை : திருநெல்வேலி, பாளையங்கோட்டை, மேலப்பாளையம் ஆகிய மூன்று முனிசிபாலிட்டிகளையும் ஒருங்கிணைத்து, திருநெல்வேலியை ஒரு கார்ப்பரேஷனாக மாற்றி நிர்வாகத்தைச் சீரமைத்தால், தாமிரபரணி ஆற்று நீரைக் கொண்டு போதும் போதும் என்கிற அளவுக்கு அனைவருக்கும் குடிநீர் சப்ளை செய்ய முடியும். மக்களின் ஒத்துழைப்புத்தான் இல்லை.

ஆமாம்; கார்ப்பரேஷன் ஆகி விட்டால் வரிச் சுமை அதிகரித்து விடுமே என்று மக்கள் பயப்படுகிறார்கள். இவர்கள் பயத்திலும் ஓர் அர்த்தமிருக்கிறது. அதிக வரி வசூலிக்கும் கார்ப்பரேஷன் நகரங்களில் வசிக்கும் மக்கள் மாத்திரம் பிரச்னைகள் இல்லாமலா வாழ்கிறார்கள்?

- சார்ல்ஸ்

# தெ.தி.க.வைத் தெரியுமா?



செல்வன்

தி.க., தி.மு.க., அ.இ.அ.தி.மு.க., பற்றியெல்லாம் அனைவருக்கும் தெரியும். தெ.தி.க. பற்றித் தெரியுமா? அதுதான் தெய்வத் திராவிட கழகம்.

''ஏதோ திராவிடம், திராவிடன் என்றால் கடவுளுக்கும் இறையுணர்வுக்கும் சம்பந்தமில்லாத விஷயங்கள் போலிருக்கிறது என்ற தோற்றத்தை உருவாக்குகிறார்கள். திராவிடன் பக்தி உள்ளவன். தொல்காப்பியத்தில் திராவிடர்கள், குறிஞ்சிக் கடவுளையும் (முருகன்) திருமாலையும் வழிபட்டதாகச் சான்று இருக்கிறது. சாதியால், மொழியால் பேதப்படாமல் இறையுணர்வால் ஒன்றுபட வேண்டும். 'ஒன்றே குலம், ஒருவனே தேவன்' என்ற திருமந்திர நெறியில் நிற்பது, சமயப் பணிக்கு நாத்திகர்கள் செய்யும் இடையூறுகளை அப்பர், சம்பந்தர் வழியில் முறியடிப்பது போன்ற கொள்கைகளை அடிப்படையாக வைத்துத்தான் தெ.தி.க.வைத் துவக்கி இருக்கிறோம். காஞ்சிப் பெரியவரின் பரிபூரண ஆசி இந்த அமைப்பிற்கு இருக்கிறது'' என்கிறார் செயலாளர் செல்வன்.

ஒரு சமயம், நெல்லையப்பர் கோயிலுக்குப் போவதைத் தடுக்க, திராவிடர் கழக ஆட்கள் முயன்ற போது, தடையை முறித்துக் கோயிலுக்குச் சென்றார்கள், ஆத்திக அன்பர்கள். இந்த நிகழ்ச்சிதான் தெ.தி.க. ஆரம்பிக்க அடிப்படைக் காரணமாக இருந்ததாம்.

- ஆர். எஸ். வீ.

சின்னச் சின்னத் தகவல்கள் :

# நெல்லை எக்ஸ்பிரஸ் வேகம் வருமா?

●● 'எரிதழல்' என்கிற பெயரில், சமூகப் பிரச்னைகளைக் கொஞ்சம் கோபப் பட்டுச் சொல்லும் கையெழுத்துப் பத்திரி கை ஒன்றை நடத்தி வருகிறார் பாளையங் கோட்டையிலுள்ள வண்ணாரப்பேட்டை யைச் சேர்ந்த இளைஞர் சுந்தரம். இதனைச் சமன்படுத்துவது போல் தியாகராஜ நகரைச் சேர்ந்த செல்வி நிலாவும் செல்வி சூர்யா வும் சேர்ந்து நடத்திவரும் கையெழுத்துப் பத்திரிகையின் பெயர் : தென்றல்!

●● பெரிய பெரிய இலக்கிய கர்த் தாக்களை உருவாக்கிய பூமி நெல்லை என் பது மட்டுமல்ல; இங்குள்ள சராசரி மனிதர் களிடம் கூட இலக்கிய நயம் இரண்டறக் கலந்திருக்கும் ஒன்று. ஆமாம்; இங்குள்ள வர்கள் யாரும், 'அவனுக்குச் சோத்துக்கே லாட்டரி'; 'அவர்க ளுக்குள் குடுமிப்பிடி சண்டை' என்றெல் லாம் இளக்காரமாகப் பேசுவதில்லை. மாறாக, 'அவனுக்குத் தற்சமயம் கொஞ்சம் வசதி போதாது; அவர் களுக்கிடையில் இப் போதைக்கு அவ் வளவு சுமுகம் போதாது' என்று நயத் தோடுதான் சொல் கிறார்கள்.

●● கூட்டமில் லாத நேரத்தில் எந்த இடத்தில் நின்று கொண்டு கையைக் காட்டினாலும் நிறுத்தி ஏற்றிக் கொள்ளும் டவுன் பஸ்காரர்கள், கூட்டமான நேரத்தில் ஸ்டாப்புகளில் கூட நிறுத்தாமல் போவது அன்றாடம் நடக்கும் நிகழ்ச்சி.

●● சரஸ்வதி தேவி தனிக் கோயில் கொண்டு விளங்குவது தமிழகத்தில் இரண் டேயிரண்டு இடங்களில்தான். ஒன்று தஞ்சை மாவட்டத்திலுள்ள கூத்தனூர் கிராமம். மற்றொன்று திருநெல்வேலியி லுள்ள கீழரத வீதி.

●● நெல்லையப்பர் கோயிலில் 'அனவரதர்லிங்கம்' என்று ஒரு லிங்கம் உண்டு. 'அன்வருதீன் லிங்கம்' என்பது தான் அனவரதர்லிங்கம் என்று மரு வியழைக்கப்படுகிறது. லிங்கத்துக்கு இஸ் லாமியப் பெயரா? நவாப் அன்வருதீனின் மனைவி தீராத நோய்வாய்ப்பட, நவாபின் நண்பர்கள் நெல்லையப்பரை நினைக்க நோய் நீங்கும் என்று சொல்ல, அதன் படியே நோய் நீங்கி விட்டது. அதற்காக

— கே. சங்கர் - ரெடிமேட்ஸ்



— தங்கம்மா



நவாப் அன்வருதீன் பிரதிஷ்டை செய்த லிங்கம்தான் இது!

●● முன்பு நெல்லையில் மேலப் பாளையம், கீழப்பாளையம் என்று இரண்டு ஊர்கள் இருந்தனவாம். இரண்டுமே இராணுவத் தளங்கள். கீழப்பாளையம் என்பது ஏதோ மரியாதைக் குறைவாக இருப்பது போல் கருதிய அவ்வூர் மக்கள், அதைப் பாளையங்கோட்டை என்று பெயர் மாற்றம் செய்து கொண்டனராம்!

●● பாரதியாரின் நெற்றியில் பளிச் சென்று குங்குமம் துலங்க வரையப் பட்டிருக்கும் படங்களைத்தான் நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோம். ''பாரதியார் இப்படிக் குங்குமம் வைத்துக் கொண்டிருந்ததை நான் பார்த்ததே இல்லை. குளித்தவுடன் சின்னதாகத் தம் நெற்றியில் திருநீறுதான் இட்டுக் கொள்வார். அப்புறம் தனியாகவோ அல்லது நண்பர்களுடனோ உட்கார்ந்து கொண்டு உரத்த குரலில் பாடுவார்'' என்றார் பாரதியாரின் மாமா பெண் தங்கம்மா.

''நீங்கள் பாரதியாரிடம் பேசியிருக்கிறீர்களா?'' என்று கேட்ட போது, ''அந்தக் காலத்தில் பெண்டுகளெல்லாம் புருஷாளோடு நேருக்கு நேர் நின்று பேச மாட்டாளோல்லியோ... அது போல்தான் நானும்! 'அத்தான் உங்களைச் சாப்பிடக் கூப்பிடறாங்க...' என்பது போன்ற சில வார்த்தைகளைத் தவிர, நான் வேறெதுவும் அவருடன் பேசியதில்லை!'' என்றார்.

●● தாமிரபரணியின் ஒரு கரையிலிருக்கும் பாளையங்கோட்டையில் படிப்பறிவு பெற்றுள்ளோர் எண்பது சதம். மறு கரையிலுள்ள திருநெல்வேலி டவுனில் எழுத்தறிவு பெற்றோர் வெறும் ஐம்பது சதம்தான்! இதே போல் பாளையங்கோட்டை மக்களின் சராசரியான தனிநபர் வருமானம் 601 ரூபாய். திருநெல்வேலியிலோ 252 ரூபாய்தான்!

●● நெல்லை மக்கள் தங்களுடைய சேமிப்பை வட்டிக்கு விடுவதிலேயே ஆர்வம் காட்டுபவர்கள் என்பதால், தமிழகத்திலுள்ள அத்தனை ஃபைனான்ஸ் கம்பெனிகளுக்கும் இங்கே கிளைகள் இருக்கின்றன!

●● கல்கியின் ஃபாஷன் பக்கத்தில் இடம்பெறத் தக்க அளவில் மிக நவீனமான டிசைன்களில் ரெடிமேட் ஆடைகளைக் குவித்துக் கொண்டு புதிதாக ஒரு ஷோ ரூம் உருவாகியுள்ளது நெல்லையில். ஏஸி வசதியுடன் கூடிய ''கே. சங்கர் - ரெடிமேட்ஸ்'' ஆடைகள் நெல்லைக்கு ஒரு புதுமைதான்.

●● திருநெல்வேலி நகராட்சிக்கும் சரி, பாளையங்கோட்டை நகராட்சிக்கும் சரி செலவை விட வருமானம் என்னவோ அதிகமாகத்தான் வருகிறது. ஆனால், இரண்டு நகராட்சிகளுமே சாலைப் பராமரிப்பு என்கிற ஒரு விஷயத்தை நினைவு வைத்திருப்பதாகவே தெரியவில்லை. எந்தச் சாலையானாலும் தெருவானாலும் ஒரே குண்டும் குழி குழியுமாகத்தான் இருக்கிறது!



☛ சத்தாம்



☛ நிலா



☛ சூர்யா

●● நெல்லை மக்களின் இன்னொரு குறை, நெல்லை எக்ஸ்பிரஸ். இது சென்னை - நெல்லைக்கு இடையில் ஓடும் நேரம் 15½ மணி நேரம். ''எக்ஸ்பிரஸுக்கு இது மிகவும் அதிகம். மதுரையிலிருந்து நெல்லை வரை இது வெறும் பாஸஞ்சராகத்தான் வருகிறது. காரணம் கேட்டால், 'அந்தப் பகுதியிலுள்ள இருப்புப் பாதை பலவீனமான'தென்று ரயில்வே நிர்வாகம் பதிலளிக்கிறது. 'பலப்படுத்துவது எப்போது?'' என்று திருப்பிக் கேட்கிறார்கள் நெல்லைவாசிகள்.

தொகுப்பு : நிருபர்



நெல்லையப்பர் ஆலயம் (படம் : தம்பையா)

# வெள்ளித்தேர் உருகியது: வேதனைப்படுவார் இல்லையா?

**நெ**ல்லையப்பர் கோயிலின் தல விருட்சம் மூங்கில். காரணம், மூங்கில் புதர்களிடையே தோன்றியவர் இவர். அதனால் முதலில் 'வேணுவனநாதர்' என்றே அழைக்கப்பட்டார். வேதசன்மா என்ற சிவபக்தரைச் சோதிக்க ஆசைப்பட்டார் எம்பெருமான். அதனால் அவரைப் பரம ஏழையாக்கினார். அப்போதும் எம்பெருமானுக்கு அமுது படைத்துப் பூஜை செய்யத் தவறவில்லை அவர்.

ஒருநாள் இறைவனுக்கு அமுதுபடைப்பதற்காக இருக்கிற சிறிது நெல்லையும் வெயிலில் உலரப் போட்டு விட்டு நீராடச் சென்றிருந்தார் வேதசன்மா. அப்போது திடீரென்று இடியும் மின்னலுமாக மழை கொட்ட ஆரம்பித்தது. 'ஐய்யோ... இறைவனுக்காக உலர வைத்த நெல் என்னவாயிற்றோ... மழையில் நெல் அடித்துச் செல்லப் பட்டிருந்தால், இறைவன் பசித்திருக்க வேண்டி வருமே... எம்பெருமானுக்குப் பசி பொறுக்க முடியுமா...' என்றெல்லாம் நினைத்துப் பதறி ஓடி வந்து பார்த்த போது, எல்லா இடத்திலும் மழை பெய்து கொண்டிருக்க, அவர் உலர்த்தியிருந்த நெல் மேல் மட்டும் மழைத் துளி விழாமல், இறைவன் வேலியிட்டிருந்த அதிசயத்தைக் கண்டு நெகிழ்ந்தார் வேதசன்மா.

இந்த அதிசயத்தைப் பாண்டிய மன்னனிடம் சென்று கூற, மன்னனும் வந்து பார்த்து அதிசயித்து, 'நெல்லுக்கு வேலியிட்டுக் காத்ததால் இன்று முதல் நெல்வேலி நாதரென்று இறைவன் நாமம் வழங்கட்டும்; 'வேணுவனம்' என்று அழைக்கப்பட்ட இத்தலமும் இனி 'திருநெல்வேலி' என்று அழைக்கப்படட்டும்' என்றான் மன்னன். அது முதல்தான் இறைவனுக்கு இப்பெயர் வழங்கலாயிற்று.

**வே**தசன்மாவை நெல்லையப்பர் சோதித்தார் என்றால், நெல்லையப்பருக்கே சாபமிட்டார் கருவூர்ச்சித்தர் என்பவர். இவர் ஒருமுறை நெல்லையப்பரை வந்து வணங்கி, 'நெல்லையப்பா' என்று மும்முறை அழைத்திருக்கிறார். அந்த நேரம் இறைவன் அமுதுண்டு கொண்டிருந்த நேரமாதலால், கருவூர்ச் சித்தரின் குரலுக்கு இறைவனால் உடனடியாகச் செவிசாய்க்க முடியவில்லை.

இறைவனிடமிருந்து பதில் வராத காரணத்தால் கோபமடைந்த சித்தர், ''இவ்விடத்தில் எருக்கு எழ!'' என்று சாபமிட்டு விட்டுப் புறப்பட்டுவிட்டார். பதறிப்போன இறைவன், தமது ரிஷப வாகனத்தில் ஏறிச் சித்தரைத் தொடர்ந்து சென்று, ''ஒவ்வோர் ஆண்டும் ஆவணி மூலநாளில் உனக்குக் காட்சி தருகிறேன்'' என்று சித்தருக்கு வரம் கொடுத்து, அவரது கோபத்தைத் தணித்து, மீண்டும்அவரை நெல்லைக்கு அழைத்து வந்து, ''இங்கு ஈசன் இருக்கின்றார்'' என்று சித்தர் வாயாலேயே சொல்லப் பெற்றுச் சாபத்தைப் போக்கிக் கொண்டார் நெல்லையப்பர்!

இது மாத்திரமல்ல; இறைவன் பார்வதியை இமயத்தில் மணம் செய்து கொண்ட போது, தேவர்கள் அனைவரும் அங்கு கூடியதால் வடபால் தாழ்ந்து தென்பால் உயர, அதைச் சமனப்படுத்துவதற்காக அகத்தியரைத் தெற்குப் பகுதிக்குப் போகச் சொன்னார் இறைவன். அப்போது அகத்தியர், ''அப்படியானால் எம்பெருமானின் திருமணக் கோலத்தைக் காணும்பேறு எனக்கில்லையா?'' என்று கேட்க, ''வேணுவனத்தில் (நெல்லையில்) உனக்குத் திருமணக் கோலத்திலேயே வந்து காட்சியளிப்பேன்'' என்று கூறி அதன்படியே காட்சியளித்த தலம் நெல்லை.

**கோ**யிலும் சாதாரணக் கோயிலல்ல. 850 அடி நீளமும் 756 அடி அகலமும் கொண்ட கோயில். செல்வத்திலும் குறைந்ததல்ல; 525 ஏக்கர் நன்செய் நிலமும் 3005 ஏக்கர் புன்செய் நிலமும் கொண்ட கோயில். கோயிலுக்குச் சொந்தமான தங்கம், வெள்ளி ஆகியவற்றின் மதிப்பு, சுமார் 71 லட்சம். வாடகைக்கு விடப்பட்டுள்ள கோயிலுக்குச் சொந்தமான கடைகளின் எண்ணிக்கை 215.

இத்தனை இருந்தும் என்ன பயன்? பிராகாரங்களிலும் மண்டபங்களிலும் இன்னமும் வௌவால்களின் அட்டகாசம் தான்; அவற்றின் கழிவுகளின் துர்நாற்றம் தான்! சுவாமிக்குச் சொந்தமான வெள்ளித் தேர் கோயிலுக்குள் பூட்டி வைக்கப்பட்டிருக்கும் நிலையிலும், யாரோ விஷமிகள் வந்து தீ வைத்து வெள்ளி உருகியிருக்கிறது. தட்டிக் கேட்க வேண்டிய இந்து அறநிலையத் துறை என்னதான் செய்து கொண்டிருக்கிறது? வெறுமனே அர்ச்சனைச் சீட்டு விற்பதற்கு ஓர் அறநிலையத் துறையும் ஏகப்பட்ட அதிகாரிகளும் எதற்கு?

- சாங்கிருத்தியாயன்



## விநாயகருக்கு வழிவிடுங்கள்!

**நெ**ல்லையப்பர் கோயிலின் வாசற்புறத்தில் இருக்கும் இந்த விநாயகரைத் தரிசிக்க வேண்டுமானால், கடைக்காரரின் அனுமதி பெற்றாக வேண்டும். ஆம்; கடையின் உள்ளே இருக்கிறார் விநாயகர். வெளிப் பகுதியில் வியாபாரம். அதனால் பல பேருக்கு இந்த விநாயகர் இருப்பதே தெரியாது. ஏன் இந்த நிலை? அந்தக் காலத்தில் தெரியாத்தனமாகவோ - தெரிந்தோ கோயிலையே கடையாக வாடகைக்கு விட்டு விட்டார்கள். இப்போது கடையைக் காலி செய்து விநாயகருக்கு வழிவிட மறுக்கிறார் கடைக்காரர்! இதே நிலை நீடித்தால் கடைசியில், 'வியாபார விநாயகர்' என்று புதிய நாமகரணம் சூட்டினாலும் சூட்டி விடலாம், யார் கண்டது!

## சுருக்கு வழிகாட்டும் முருகன்!

**'பி**றவி என்பது பெருங்கடல். அதை அத்தனை சுலபமாக அனைவரும் நீந்திக் கடந்து விட முடியாது' என்பார்கள். ஆனால், நெல்லை நகரையொட்டித் தாமிரபரணி நதிக்கரையில் அமைந்துள்ள முருகனை உளமுருகிக் கும்பிடுவோருக்கு அந்தக் கவலையெல்லாம் கிடையாது. சாஸ்திரங்கள், சம்பிரதாயங்கள் என்று எதையும் அறியாதவர்களையும் பிறவிப் பெருங்கடலைச் சுலபமாகக் கடக்கச் செய்து விடுவான் முருகன். இதன் காரணமாகவே இந்த முருகனுக்குக் 'குறுக்குத்துறை முருகன்' என்று பெயர். அதாவது பிறவிப் பெருங்கடலை நீந்துவதற்குக் குறு(சுரு)க்கு வழிகாட்டும் முருகன்.

ஞானத்தை விடவும் பக்தி பெரிது என்று உணர்த்தும் வேலவன்.






போபர்ஸ் ஊழல்...

பொதுஜனம்

அந்த ஆளுக்குத் தூக்க மாத்திரை கொடுக்காமல் இருந்திருக்கலாம்!

மத்திய அரசு தந்த தூக்க மாத்திரை...

போபர்ஸ் — சி.பி.ஐ. விசாரணை






# மகாமக விபத்துக்குக் காரணமான மகாமகா தவறுகள்!

கும்பகோணம் மகாமகக் குளத்தில் நடந்த சோக சம்பவம் வேதனை அளிக்கிறது, அனுதாபம் பெருகச் செய்கிறது என்ப தெல்லாம் ஒருபுறமிருக்க, சில அடிப்படையான கேள்வி களையும் எழுப்புகிறது. அந்தக் கேள்விகள், நமது முதல்வரும் போலீஸ் துறையும் இயங்கும் விதத்தைப் பற்றியவை. ஒருவரை ஒருவர் அனுசரித்துச் செயலாற்றுகின்றனரா என்ற முக்கியமான அம்சத்தை அலசுகிறவை :

- மகாமகத்துக்குக் கும்பகோணம் கொள்ளாத அளவுக்குக் கூட்டம் திரளும் என்பது போலீஸ் உயர் அதிகாரி களுக்குத் தெரியும் அல்லவா?
- அந்தக் கூட்டத்தினிடையில் முதல்வர் செல்வதன் மூலம், அவருக்கு ஏற்படக்கூடிய ஆபத்துக்களை அதிகாரிகள் உணர்ந்திருந்தார்களா?
- அவருக்குப் பாதுகாப்பு அளித்துக் காப்பாற்றி விட முடி யும் என்ற நம்பிக்கை போலீஸ் அதிகாரிகளுக்கு இருந்தது எனில், அதே சமயம் மக்களுக்கும் பாதுகாப்பு அளிப்பது சாத்தியமற்ற காரியம் என்பதை அவர்கள் யோசித்திருக்க வேண்டாமா?
- கும்பகோணம் மகாமகக் குளத்தின் அமைப்பு, அதில் மக்கள் வந்து குளிக்கவும் வெளியேறிச் செல்லவும் உள்ள வழிகள் ஆகியவை பற்றி அலசி, பேசப்பட்டு, திட்டங்கள் வகுக்கப்பட்டனவா?
- அந்தத் திட்டங்கள் முதல்வர் வருகையால், அவர் பாது காப்புக் கருதி மாற்றப்பட்டன, மக்கள் வெளியேறும் வழிகள் அடைக்கப்பட்டன எனில், அதனால் மக்களுக்கு உண்டாகக் கூடிய அபாயங்களை உயர் போலீஸ் அதிகாரிகள் ஊகித்து விழித்துக் கொண்டிருக்க வேண்டாமா?
- அத்தகைய விழிப்புணர்ச்சி ஏற்படவில்லையெனில் யார் பொறுப்பேற்பது?
- உணர்ந்து அறிந்திருந்தார்கள் எனில், அந்த ஆபத் துக்களை முதல்வரிடம் விளக்கிக் கூறி அவரை எச்சரித்திருக்க வேண்டாமா?
- "சாதாரணமாகவே உங்களைப் பார்க்க மக்கள் லட்சக் கணக்கில் கூடுவார்கள்; அதுவும் மகாமகக் குளத்தில் நீங்கள் புனித்து, ஸ்நானம் செய்யப் போகிறீர்கள் என்றால் அதைக் காண விரும்பும் மக்களின் ஆர்வத்தைக் கட்டுப்படுத்த முடியாமல் போகும். மகாமகக் குளியலுக்காக மட்டுமின்றி உங்களுக் காகவும் வரும் கூட்டம் சமாளிக்க முடியாததாகி விடும். இடம் காணாது. திறந்தவெளி மைதானம் அல்ல. நாலுபுறமும் சுவர்கள்; வீடுகள். கூட்டத்தை ஒப்புநோக்கக் குளம் மிகச் சிறிது. அலை அலையாக வருவோர் ஒருவர் மீது ஒருவர் சரிந்து நசுங்கும் வாய்ப்புண்டு" என்பதையெல்லாம் உயர் போலீஸ் அதிகாரிகள் யோசித்து, எடுத்துக் கூறி, இந்தத் திட்டத்தைக் கைவிடுமாறு முதல்வரைக் கேட்டுக் கொண்டிருக்க வேண்டாமா?
- அல்லது குறைந்தபட்சம், 'இதை அரசியல் ஆக்க வேண் டாம்; கட் அவுட் வேண்டாம்; கட்சிக்காரர்களின் பிரசாரம் வேண்டாம்' என்றாவது ஆலோசனை வழங்கினார்களா?
- இவ்வாறெல்லாம் முதல்வரை அதிகாரிகள் கேட்டுக் கொள்ளவில்லை எனில் அது கடமையில் தவறியது ஆகாதா?
- ஒருவேளை அதிகாரிகள் கேட்டுக் கொண்ட பிறகும் 'ஜெ' அதை மதிக்காமல், "நான் போகத்தான் போவேன்; பாது காப்பு அளிக்க வேண்டியது உங்கள் பொறுப்பு" என்று சொன்னாரா?
- அல்லது அதிகாரிகள் இம் மாதிரி நிகழலாம் என்று அறிந்திருந்தும் அது பற்றி முதல்வரிடம் பேச அஞ்சினார்களா? முதல்வரைத் திருப்திப்படுத்துவதே முதல் நோக்கம் என்று சும்மா இருந்தார்களா?

விசாரணைக்கு மாஜிஸ்திரேட் ஒருவர் நியமிக்கப்படுவார், உறுதி. மேற்படி கேள்விகளுக்கு விசாரணையில் விடை கிடைக் காது, நிச்சயம்! ஆனால் பதில்களைப் பெறும் உரிமை மக்களுக்கு உண்டு.

இறந்தவர்களின் குடும்பங்களுக்கு நஷ்டஈடு தர வேண்டும்தான். மாண்டவர் மீளப் போவதில்லை என்றாலும் உடனடி உதவி, ஓரளவு ஆறுதல். ஆனால் மேற்படி கேள்வி களுக்குப் பதில் கிடைக்கவில்லை எனில் அது ஜனநாயகத்துக்கு ஈடுசெய்ய முடியாத நஷ்டமாகும்.

முதல்வருக்கும் அதிகாரிகளுக்கும் இடையே உள்ள செயல்பாட்டு உறவு எத்தகையது என்பது மக்களுக்குத் தெரிய வேண்டும்.



# கல்கி



1992
மார்ச் 1
மலர் : 50
இதழ் : 31
பிரஜோத்பத்தி
மாசி 18

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.

## டிப்ஸ்... டிப்ஸ்... டிப்ஸ்... டிப்ஸ்...

## டி.வி. பராமரிப்பு எப்படி?



1. வால்யூம் கண்ட்ரோலை முதலில் ஆஃப் செய்து விட்டுப் பிறகு போர்டு ஸ்விட்சை ஆஃப் செய்யுங்கள். கண்ட்ரோலை ஒரே நிலையில் வைத்து விட்டு போர்டு ஸ்விட்ச்சை ஆஃப் செய்வதால் கண்ட்ரோல் கார்பனில் ஸ்பார்க் ஏற்பட்டுக் கரகர ஒலி ஏற்படும்.

2. காண்ட்ராஸ்டை 75% ல் வைத்துக் கொள்ளுங்கள்.

3. படம் வெளிச்சமாக இருக்க வேண்டும் என்று ப்ரைட்னெஸ் கண்ட்ரோலை முழுதுமாய்த் திருப்பாதீர்கள். காட்சிகளுக்கு வேண்டிய அளவு கறுப்பு இருந்தால்தான் முப்பரிமாணம் கிட்டும்.

4. ஃபைன் ட்யூன் அட்ஜஸ்ட் செய்யும் முன்பு, ஆட்டென்னா சரியான நிலையில் உள்ளதா என்பதைச் சோதித்துக் கொள்ளுங்கள்.

5. உங்கள் ஆன்டென்னாவின் குட்டையான எலிமண்ட் எப்போதும் டீ.வி. ஸ்டேஷனை நோக்கியே இருக்க வேண்டும்.

6. ஆன்டென்னாவின் அருகில் டிரான்ஸ்ஃபார்மரோ, மின் கம்பிகளோ இல்லாமல் அமையுங்கள்.

- எஸ். ரங்கநாதன், சென்னை - 53.

## நற்குணங்களுடன் குழந்தை வளர...

1. பெரியவர்கள் குழந்தைகளின் எதிரில் சண்டையிடக் கூடாது.

2. குழந்தைகள் எதிரே உறவினர்கள் பற்றி அவதூறாகப் பேசாதீர்கள்.

3. குழந்தைகளை வைத்துக் கொண்டு பிறரிடம் குறைகாணுதல், குறை காணும் குணத்தைக் குழந்தைகளிடம் வளர்க்கும்.

4. கணவன், மனைவி இருவரும் வேலைக்குச் சென்றாலும் வீட்டிற்கு வந்த பிறகு அலுவலகத்தில் உள்ள கஷ்டங்களைக் குழந்தைகள் எதிரே அலசாதீர்கள். உழைத்துச் சம்பாதிப்பதில் பெருமை அடைவதை அவர்களுக்கு உணர்த்துங்கள்.

5. பெரியவர்களிடம் அன்பாகவும், பணிவாகவும் நடந்து கொண்டு, குழந்தைகளும் அவ்வாறே நடந்து கொள்ளப் பழக்குங்கள்.

6. போதை மருந்தும், இதர கெட்ட பழக்கங்களும் சகவாச தோஷத்தால் ஏற்படுகின்றன. இவற்றைத் தவிர்க்க நாம் குழந்தைகளிடம் அன்பாகப் பேசுவதுடன் இவை எவ்வளவு ஆபத்தானவை, எதனால் என்பதையும் எடுத்துக் கூறி எச்சரிக்க வேண்டுமே தவிர, மூடி மழுப்பக் கூடாது. குழந்தைகளுக்குத் தனிமை உணர்வு ஏற்படாமல் நட்புணர்வையும் பாச உணர்வையும் அடிக்கடி வெளிப்படுத்த வேண்டும்.

- ஆர். பாமா, சென்னை.

ஃபாஷன் பக்கம் :

# 'தில்' இளைப்பும் துப்பட்டா!

சல்வார் கமீஸ் கொஞ்சம் பழசாகிவிட்டதா? பளிச்சென்று ஒரு சிஃபான் 'துப்பட்டா'வை வாங்கி, அதோடு அணியலாம். பழைய களை மறைந்தே போகும்!

- ஒரு தோளில் மட்டும் தொங்க விடுவது;
- இரு தோள்களிலும் பரவ விடுவது;
- கழுத்தைச் சுற்றி 'காஷு'வலாக முடிந்து கொள்வது;
- தோளிலிருந்து சரியவிட்டு, பக்க வாட்டில் துளி போல் முடிச்சிட்டுக் கொள்வது;
- தலையில் ரிப்பனைப் போல் ஒரு முனையைக் கட்டி, மறு முனையைத் தோளில் துவள விடுவது (படம்)

என 'துப்பட்டா' அணியும் விதத்தில் கற்பனை மிக்க வேறுபாடுகள்.

புடைவைகளில் எத்தனை வகை உண்டோ, அத்தனை வகை, துப்பட்டாவிலும் இருக்கிறது... லேட்டஸ்டாக - அப்பாவின் அங்க வஸ்திரங்களைத் துப்பட்டாவுக்காக அபகரிக்கிறார்கள் பெண்கள்.

பளிச்சென்ற பச்சை, சிவப்பு பாந்தினி சல்வார் கமீஸ்களுடன் இந்த அங்கவஸ்திர துப்பட்டாக்கள் அழகாகவே உள்ளன.

வண்ணப்படங்கள் : யோகா
படத்தில் : ப்ரியா, பூர்ணிமா
நன்றி : நாயுடு ஹால்



ஜிட்டாவிடம் சிவசங்கரனை முதலில் கூட்டிப் போனது சுப்ரமணியன்தான். தாமிரபரணி ஓடுகிற கரை ஓரம், கலோசனா முதலியார் பாலத்துக்கு வலப்புறம் உள்ள மண்டபத்துக்குள் நுழையும் நிமிஷம், மனசு பரபரத்தது. ஜிட்டா எப்படி இருப்பார்? எல்லா சாமியார் போலவும் காவி உடை, நீண்ட தாடியுடனா?

''இவர சாமியார், ரிஷி, ஞானினு என்னவெல்லாமோ சொல்றாங்க சிவா. இவர் அதெல்லாமானு தெரியலை. ஆனா சத்யமா மனுஷனுக்கு மேல. அந்தக் கண்ணு, பேசுற தத்துவம் இதெல்லாம் லேசில்லை. சத்யமா மனுஷத்தனமும் இல்லை. அதுக்கும் மேலே. தெய்வமுமில்லை. இடைல ஏதோ ஒன்னு. பாலம் மாதிரி, கடவுளுக்கும் நமக்கும் நடுவுல கயிற்றுப் பாலம் பின்னுற மாதிரி. நீ கட்டாயம் இவரைப் பார்க்கனும், மனக் கிலேசம் போயிரும் சிவா. பஞ்சு மாதிரி பறந்திடும்.''

மணிக்கு இப்படி நிறைய ஈடுபாடுகள் உண்டு. அதனாலோ என்னவோ இன்னும் இவனுக்குக் கல்யாணமாகவில்லை என்று தோன்றும். வாரந்தோறும் நெல்லையப்பர் கோவில், மாசம் ஒரு தடவை சிவசக்தியில் படம். எப்போதாவது நண்பர்களுடன் ஆரியாஸில் இரவு சாப்பாடு. இது போக இசை, நாடகம், தத்துவம், புத்தகங்கள் என்று எக்கச்சக்கமான பொழுது போக்குகள். இதனால்தான் இவனால் பரபரப்பு இல்லாமல், எந்தவிதமான கவலையும் மனசில் ஒட்டிக் கொள்ளாமல் இருக்க முடிகிறதா? சிவசங்கரன் நெற்றியை ஒற்றை விரலால் அழுத்தி விட்டுக் கொண்டான்.

தப்புச் செய்து விட்டேனா? இருபத்தேழு வயசில் சிவப்பாய் கண் முன்னால் பெண்ணைக் காட்டினதும் ''சரி'' என்று வெட்கமாய்ச் சிரித்துக் கல்யாணம் செய்து கொண்டது தவறா? முதலில் அலுப்பாயில்லை. வரவர மீரா, குழந்தைகள் எல்லாமே அலுத்துப் போயிற்று. காப்பிப் பொடி நூறு கிராம், ஆறு சோப் என்று ராணி ஸ்டோரில் மளிகைக் கடை லிஸ்டுடன் நிற்பது தவிர, வேறு ஒன்றுமே வாழ்க்கை இல்லையா என்று மனசு அடித்துக் கொண்டது.

''ஏன் டல்லாருக்கீங்க.... அசதியாருக்கா?''

''இல்ல மீரா.''

''இப்பல்லாம் முன்ன மாதிரி இல்ல நீங்க. எப்பவாச்சும்தான் சிரிச்சுப் பேசுறீங்க. கலகலப்பாருக்கீங்க. ஏதாச்சும் வருத்துதா?''

''ம்ஹூம்.''

''பின்ன ஏன் இப்படி?''

'தெரியலை மீரா.''

''ஜிட்டாவுக்குத் தெரியும்'' என்றான் சுப்ரமணியன். ''அவர் என்ன என்று வைத்தியர் மாதிரி மனசின் குறையைச் சரியாக சொல்லி விடுவார்'' என்றான்.

சனிக்கிழமை ஆபீஸ் முடிந்ததும் கிளம்பினார்கள். சுப்ரமணி லெஷ்மி விலாஸில் கால் கிலோ அல்வா வாங்கிக் கொண்டான்.

''நடந்திடலாமா சிவா?''

''ம்.''

நடக்கும்போது தான் மீரா ஒரு ஜோடி ஹேர்பின் கேட்டது ஞாபகம் வந்தது. சுப்ரமணி, அல்வா வாங்கும்போது, எதிர் வரிசை சிவாஜி ஸ்டோரில் வாங்கியிருக்கலாம்.

மண்டபம் தாண்டிப் போனதும் ஓங்கிக் காற்றடித்தது. சிவசங்கரன் வேட்டியை இழுத்துக் கால்முட்டுக்குள் இழுத்து விட்டுக் கொண்டான். மண்டபம் நெருங்க நெருங்க, மணி சொன்ன மாதிரி மனசில் ஈரம் படர்ந்தது. நீரின் குளிர்ச்சியைச் சுமந்து கொண்டு, வேஷ்டி தழுவிக் காற்று முட்டியது. இது தான் வேறு உலகமா? இருபத்தேழு வயசில் மீராவைப் பார்த்ததும் படர்ந்த ஈரம்; முதல் குழந்தையைப் பார்க்க லெஷ்மி நர்சிங் ஹோமுக்குள் நுழைந்தபோது படர்ந்த ஈரம்; அம்மா செத்துப்

தமயந்தி



போன போது பழுக நினைத்துப் படர்ந்த ஈரம்; எப்பவாவது கிராமத்துக் குப் போய் அப்பாவைப் பார்க்கும் போது மனசில் படர்கிற ஈரம்....

அது வேறு. இது அலையாய் அடிக்கிறது. அங்குசம் வைத்துப் பின் மண்டையில் அடித்துப் புத்தியைக் கிளப்புகிறது. உள்ளே நுழைந்ததும் கதவு மூடிக் கொண்டது. சாம்பிராணி ம ண ம். சுத்தம் பரம சுத்தம். ஏதோ ஒரு மஞ்சள் துணி யில் சுப்ரமணியன் பவ்ய மாய் உட்கார்ந்து கொண் டான். 'நீயும் உட்கார்' என்று கண் காட்டினான். பைக்குள்ளிருந்து பாக்கு, வெற்றிலை, கற்கண்டு, பழம், அல்வா எ டு த் து ஜிட்டா முன்னாலிருந்த தட்டில் வைத்தான்.

''நமஸ்காரம்.''

''ம்ம்....''

''இவன் சிவசங்கரன், கூட வேலை பார்க்கிறான். மனசு சரியில்லைன்னான். அதான் கூட்டி வந்தேன்.''

ஜிட்டா சிவசங்கரனைத் திரும்பிக் கூர்மையாகப் பார்த்தார்.

''கிலேசம் உன் கண்ணில் தெரியுது. மனசு என்பது காற்று மாதிரி, சகலம் வழி யாகவும் ஊடுருவும். பரவும். புலப்படும். உனக்குக் கண்ணில் தெரியுது. மனசில் சுருக்கம் இருப்பது தெரியுது. உன்னையே நீ கேட்டுக் கொள். உன் மனம் காற்றா? நெருப்பா? தகிக்கிறதா? சிலவேளை சுடு கிறதா? விட்டுவிட்டு ஓடிவிட வேண்டும் என்று எரிகிறதா? மனசைக் கழற்றி வைக் கிற ஆசை வரும். கழற்றிவிட்டு எங்காவது மரணித்தவன் போல இருக்கச் சுகமாயிருக் கும். இருந்திருக்கிறாயா?''

அந்தப் பெரிய கண்கள் சிவாவை ஊடுருவின. சிசங்கரன் பார்வையைத் தாழ்த்திக் கொண்டான். நெஞ்சு படபடத் தது. இதுதான் சிவசங்கரா உன் குறை. உன் வியாதி. உன் கிலேசம். உன் துக்கம். உன் மனசை உரி. பாம்புச்சட்டை மாதிரி உரித்து விட்டுப் போ. தள்ளிப் போ. படுத்துக் கொள். இப்போது நீ யாருமில்லை. யாருக்கும் சொந்தமில்லை. உனக்குப் பெயர் கிடையாது. நீ அஃறிணையு மில்லை. உயர்திணையுமில்லை. நீ காற்று, நெருப்பு, மழை நீர். சோவென்று பெய்வாய். நெருப்பாய்க் காய்வாய். காற் றாய் வீசுவாய். எல்லா மூலைக்கும் உன் னால் பரவ முடியும். இதுதான் உன் நிஜப் பிரமை.

சட்டென்று கழற்றின மனசு விழித்துக் கொண்டது. அங்கும் இங்கும் தேடிற்று. பொருட்காட்சியில் தொலைந்த குழந்தை யாய் மிரண்டது. காற்றாய், நெருப்பாய், நீராய்ப் பரந்து விரிந்து கிடந்ததைப் பார்த்து ஒட்டிக் கொண்டது. சிவசங்கரா ஏன் என்னை விட்டுப் போனாய் என்று புலம்பி ஈஷிக் கொண்டது.

''இந்த பரிச்சயம்தான் வாழ்க்கை சிவ சங்கரா. நீ தேடுவது, தொலைந்து விட்ட தாக நினைத்தது. உன் வாழ்க்கை உன்னி டம் தான். நீயே அலைபாய விட்டு விட் டாய். தேடு, கிடைக்கும். மிரளாதே, எங்கா வது உறக்கத்தில் இருக்கும். எழுப்பு, போ. உன் வேதனை கிலேசம் சகலமும் அகன்று போகும். போ. தெளிவோடு வா.''

சிவசங்கரன் மனசு லேசாக, சாஷ் டாங்கமாக நமஸ்கரித்தான். அலைபாய்ந் தது சட்டென்று அடங்கியது. சுவர் சுவராய் முட்டித் தேடியது இடம் கண்டு சேர்ந்து கொண்டது. ஜிட்டா விபூதி பூசி விட்டார். கதவு தள்ளிக் கொண்டு காற்று நுழைந்தது. மேலெல்லாம் ஈரமாய் வீ சி வி ட் டு ப் போனது.

சுப்ரமணியன் எழுந்து கொண்டான். ''வா.''

கதவைத் திறந்து அவன் பின்னால் நடந்தபோது தொண்டையில் கனமாய் ஏதோ சிக்கிற்று. அழுகை.

பெருமாள்புரத்தில் இறங்கின போது இருட்டியிருந்தது. செந்தில் முருகன் ஸ்டோர்ஸில் மீராவுக்கு மறக்காமல் ஹோர்பின் வாங்கிக் கொண்டு நடந்தான். வீட்டு வாசல் நடையில் புதுஜோடி செருப்புக் கிடந்தது. உற்றுப் பார்த்ததில் அப்பாவுடைய செருப்பு. அறுவடை முடிந்து வந்திருக்கிறார் போலும். இன்னும் இரண்டு மாதம் மீரா அரிசி, வத்தல் என்று நச்சரிக்க மாட்டாள். அப்பாடா......

பழையபடி அன்றாடக் கவலைகள். வீட்டு வாசலில் செருப்பைக் கழற்றும் போது மாட்டிக் கொள்ளும் கவலைகள். இதில் எங்கே தொலைந்த மனசைத் தேட? அலைபாய விட்ட காற்றைத் தேட? எல்லாம் மாயம். மனசு மாயம். வாழ்க்கை மாயம். அரிசியும் புளியும் நிதர்சனம். ஸ்கூல் பீஸ் நிதர்சனம்.

''வாடா... எங்க போயிட்டே? பேரக் குழந்தையும் சந்தோஷமும் சூழ்ந்த அப்பா. காப்பித் தம்ளருடன் மீரா.

''மணியோட ஆத்துப்பாலம் வரைக்கும் போயிருந்தேன்.''

''என்ன திடீர்னு?''

''சும்மா.''

சொல்லலாமா? வேண்டாம். புரியாது இவர்களுக்கு . அந்த உலகம் வேறு. ஆம்ஸ்ட்ராங் பார்த்த நிலவுலகம் மாதிரி பரவசமானது. கடவுள் என்கிற புரியாத புதிரை மனிதனோடு இணைக்கிற கயிற்றுப் பாலம். பின்கட்டில் நெல்மூட்டைகள், புளி, வற்றல், எல்லாம் அடுக்கப்பட்டிருந்தன. அடுப்பில் பருப்பும் முருங்கைக் காயும் வேகிற வாசம் அடித்தது. புதுச் சமையலாய் இருக்கும்.

தாழ்வாரத்தில் யாரோ படுத்திருந்தது தென்பட்டது. யாரது? திரும்ப உள்ளே வந்து மீராவிடம் கேட்டான்.

''யாரு மீரா பின்னால?''

''அப்பா கூட்டிட்டு வந்திருக்கார். வயல்ல வேலை செஞ்ச பொம்பளையாம். புருஷங்காரன் இங்கிருக்கானாம். விட்டுட்டு ஊர் விட்டு இங்க வந்துட்டான் போல. அஞ்சு புள்ளைங்களாம், பாவம். புருஷனைப் பார்த்துக் கூட்டிப் போக வந்திருக்கு . நாளைக்கிக் காலைல பார்த்துக்கலாம்னுருக்கார் அப்பா.''

அப்பா வாசல் நடையில் நின்று கவனித்துக் கொண்டிருந்தார்.

''யாரு லெஷ்மியைக் கேட்டியாடா? பாவம். ஆம்பிளை பொகக்குறு குடும்



பத்தை அறுத்த மாதிரி, பொம்பளை விட முடியுதா? ஆயிரம் யோசனை, எல்லாத் துக்கும் மேலே பாசம்.''

''அவனுக்கு என்ன கஷ்டமோ? இவ மேல வருத்தமோ என்னமோ? நமக் கென்ன தெரியும்?''

''கஷ்டம்னா... ஓடிட வேண்டியது தானா? அதான் வழியா? அப்ப முதல்ல யோசிச்சிருக்கணும். கல்யாணத்தோட முடிச்சுப் போடுறதுக்கு முன்னால நினைச் சிருக்கணும். அங்க பிள்ளை பெறும்போது தேவையானு நினைச்சிருக்கணும். ஓடி யிருக்கணும்னா அதுக்கு முன்னால போயி ருக்கணும். மத்த ஜீவன்ங்க கஷ்டப்பட் டிருக்காது. உலகத்துல கஷ்டம்னு எல்லா ரும் ஓடிட்டா எதுக்கு மனுஷன்? எதுக்குக் கடவுள் சிவசங்கரா?''

சமையலறை மங்கின பல்ப் வெளிச் சத்தில் அப்பா நிழலும் வெளிச்சமுமாய்த் தெரிந்தார்.

''விட்டுடாம இருக்கறதும் வாழ்க்கை தான் சிவசங்கரா. அதுவும் கஷ்டம் தான். புரிஞ்சிக்கணும். இல்லைனா - விட ணும்னா காலை நீருக்குள்ள விடுறதுக்கு முன்னயே விலகிக்கணும். பாதி ஆத்துல திரும்பறது நம்பி வந்தவர்களை முங்க விடுறது அத விட பாவமில்லையா? கஷ்டமோ நஷ்டமோ அந்தக் கரை சேர்றது வாழ்க்கை இல்லையா?''

சிவசங்கரன் தி ரு ம் பி அந்தப் பெண்ணைப் பார்த்தான். ஒடுங்கிப் போய் படுத்துக் கிடந்தாள். தூங்கவில்லை என்று முதுகின் ஏற்ற இறக்கம் சொல்லிற்று. திடீரென்று அந்தப் பெண் மறைந்து மீரா அப்படி இழுத்துப்பிடித்து ஒடுங்கினாற் போல கிடக்கிற மாதிரி தோன்றியது. சடாரென்று உடம்பை உதறிக் கொண் டான்.

''இவ புருஷன் என்ன பண்றான் இங்க?''

''ஆத்துப்பாலம் கிட்ட உள்ள சைக்கிள் கடை ஏதோ ஒண்ணுல உறவுக்காரங்க இருக்காங்களாம். அவங்களுக்குத் தெரியு மாம். காவி கட்டிக்கிட்டான்னு பேச்சு. காலைல தேடணும். பாவம் யாருமில்லாத பொண்ணு''

அப்பா மேல் நோக்கிக் கையெடுத்துக் கும்பிட்டார். ''ஈஸ்வரா'' என்றார். மனசு மிரண்டு போய் அப்பாவிடம், மீராவிடம் ஒட்டிக் கொண்டது.

''பாவம் இல்லீங்க... எங்கிருக்கானோ அந்தப் பாவி?''

எங்கே இருக்கிறானோ என்பதை விட அவன் ஜிட்டாவாய் இருக்கக் கூடாது என்று மனசு ஏனோ வேண்டிக் கொண்டது.



18

# காதலெனும் வானவில்

ஓசைப்படுத்தாமல் குலுங்கும் அந்த முதுகைப் பார்க்கையில் அது கட்டுப்படுத்த முடியாத அந்தரங்கமான துக்கம் என்று மீராவுக்குத் தோன்றிற்று. இதுநாள் வரை மீனாட்சி மேல் இருந்த கோபம் கிட்டத்தட்ட மறந்து போன நிலையில் அவள் முதுகைத் தொட்டு, ''ஏய் என்ன ஆச்சு உனக்கு?'' என்றாள் மீரா வியப்புடன். ''யாரோ செத்துப் போன மாதிரி அழறே?''

மீண்டும் மீனாட்சியின் கண்களில் மளக்கென்று நீர் நிறைந்தது. கன்னங்களில் வழிந்து இறங்கிற்று.

''செத்துப் போன மாதிரிதான் இருக்கு. தற்கொலை பண்ணிக்கணும் போல இருக்கு.''

''சிச்சி, என்ன உளர்றே?'' என்றாள் மீரா திடுக்கிட்டு. ''யாராவது திட்டினாங்களா? திட்டினா கொஞ்ச நேரத்துக்குக் கஷ்டமாத்தான் இருக்கும். ஏன் திட்டறாங்கன்னு யோசிச்சுப் பாரு. இதுக்கெல்லாம் தற்கொலை பண்ணிக்கணும்னு கிளம்பினா'' -

''யாரும் திட்டல்லே'' என்றாள் மீனாட்சி.

மீரா ஏமாற்றத்துடன், ''பின்னே எதுக்கு இந்த அழுகை?'' என்றாள். ''முந்தாநேத்து அத்தனை சந்தோஷமா இருந்தே?''

மீனாட்சி சற்று நேரம் மௌனமாக இருந்தாள், தனது உணர்ச்சிகளை ரொம்பவும் கஷ்டப்பட்டு அமுக்கப் பார்த்தவள் மாதிரி.

மீராவைச் சந்தேகத்துடன் நிமிர்ந்து பார்த்து, ''உனக்குப் புரியாது மீரா'' என்றாள் சோகத்துடன்.

''என்ன புரியாது?''

''என் துக்கம். காதல் என்கிறதை அனுபவிச்சவங்களுக்குத்தான் புரியும். நீ யாரையாவது காதலிக்கிறியா?''

'காட், இதுதானா' என்று தனக்குள் ஏற்பட்ட சலிப்பை மறைத்துக் கொண்டு, மீரா லேசாகச் சொன்னாள், ''நா எல்லாரையும் காதலிக்கிறேன் மீனாட்சி. உலகத்தையே நேசிக்கிறேன்.''

''சரி, விடு'' என்றாள் மீனாட்சி விரக்தியுடன். ''உங்கிட்ட இதைப் பத்திப் பேசிப் பிரயோஜனமில்லே. உனக்குப் புரியாது. நா சொல்ற விஷயம் வேறே. அது ஒரு மகத்தான அனுபவம்னு நா சொன்னா நீ சிரிப்பே. என்னுடைய துக்கத்தைக் கண்டு அனுதாபம் வராது.''

''ஓ.கே. எனக்குப் புரியாதுன்னே வெச்சுக்குவோம். ஆனா என்ன விஷயம்னு சொல்லு. என்னாலே உதவ முடியுமான்னு பார்க்கறேன். நேத்துக்கும் இன்னிக்கும் என்ன வித்தியாசம் நேர்ந்து போச்சு?''

''நிறைய வித்தியாசம்'' என்று சினிமாக் கதாநாயகிகளைப் போல் மீனாட்சி நீண்ட பெருமூச்சு விட்டாள். ''நா மணியை ரொம்பக் காதலிக்கிறேன் மீரா. என் உலகமே அவன்தான்னு நினைச்சுக்கிட்டிருக்கேன்.''

எந்த நிமிஷமும் மணி அடிக்கலாம் என்கிற கவனத்துடன், ''ஓ.கே. ஃபைன்'' என்றாள் மீரா. ''உங்க அம்மா அப்பாவுக்கு அது பிடிக்கல்லியா?''

மீனாட்சி சோகத்துடன் தலையசைத்தாள். ''இன்னும் அந்த கட்டத்துக்கெல்லாம் வரவேயில்லே.''

''பின்னே, இப்ப என்ன பிரச்னை?''

''மணியேதான் பிரச்னை. அவன் எங்கிட்டேந்து விலகிப் போற மாதிரி இருக்கு.''

மீரா வியப்புடன் மீனாட்சியைப் பார்த்தாள். அன்றும் மணி இவளுடன் பசை போல் ஒட்டிக் கொண்டு நின்றதும் கூச்சமில்லாமல் எல்லார் முன்னிலையிலும் சல்லாபித்ததும் கண்ணில் நின்றது.

''என்னாலே நம்ப முடியல்லே மீனாட்சி. அவன் ஏதாவது சொன்னானா?''

''திட்டவட்டமாச் சொல்லல்லே. ஆனா எனக்குப் புரியறது. என் மேல எரிச்சல் படறான். உன் பிரியமே எனக்குச் சுமையாப் போயிடும் போல இருக்குங்கறான். அதுக்கு என்ன அர்த்தம் மீரா?''

மீரா சங்கடத்துடன் அவளைப் பார்த்தாள். நொறுங்கிப் போனவளைப் போல் இருக்கும் அவளைக் கண்டு மெல்லிய பரிதாபம் ஏற்பட்டது.

''எனக்குத் தெரியல்லே மீனாட்சி'' என்றாள் மெல்ல. ''கொஞ்ச நாள் விட்டுப் பிடி. உன் மேல உண்மையான பிரியம் இருந்தாத் தன்னாலே புரிஞ்சுக்குவான், உன்னைக் கஷ்டப்படுத்திட்டோம்னு. அவனுக்கு அன்னிக்கு ஏதாவது ப்ராப்ளம் இருந்திருக்கும்.''

மீனாட்சியின் முகத்தில் மெல்லிய பிரகாசம் தோன்றுவதைக் கண்டு மீராவுக்கு

அதிகப் பரிதாபம் ஏற்பட்டது. அவளுடைய கைகளைத் தோழமையுடன் அழுத்தி மீனாட்சி உத்வேகத்துடன் சொன்னாள்.

''அப்படி இருக்கும்னு நினைக்கிறியா? அவன் என்னை நிராகரிச்சுட்டான்னா நா செத்துருவேன் மீரா!''

மறுபடி மளுக்கென்று கண்களில் நீர் நிறைவதைக் கண்டு மீரா திடுக்கிட்டாள். இன்று தென்படும் மீனாட்சி அவளுக்குப் பரிச்சயமில்லாதவள் என்று தோன்றிற்று.

''உஷ். மீனாட்சி ஏன் இப்படி அழறே? உற்சாகமாக இரு. உண்மையான பிரியம் இருந்தா நிராகரிப்பானா? தன்னாலே நாளைக்கு 'ஸாரி'ன்னு வருவான் பாரு. அழறது பலவீனம் மீனாட்சி.''



மீனாட்சி நிமிர்ந்து உட்கார்ந்து, கண்ணைத் துடைத்து, மூக்கைச் சிந்தி, அவளைப் பார்த்துப் புன்னகை செய்தாள்.

''பலவீனம்தான், ஒத்துக்கறேன். அவன் நழுவிப் போயிடுவானோ என்கிற நினைப்பே என்னைக் கொன்னுட்ட மாதிரி இருக்கு.''

'' 'மாதிரி' தானே இருக்கு?'' என்று மீரா அவள் தோளை சினேகிதமாகத் தட்டினாள். ''நீயா அழுது சாவுமணி அடிக்காதே'' என்றாள் ஆங்கிலத்தில். ''கொஞ்ச நாளைக்கு அதைப் பத்தி 'யோசனை பண்ணாமே இரு. பரீட்சைக்குப் படிக்க ஆரம்பி.''

''நீ சுலபமாச் சொல்லிட்டே'' என்றாள் மீனாட்சி துயரம் தொனிக்கும் குரலில். ''மனசை முழுசா நிறைஞ்சிருக்கிறதை ஒதுக்கிட்டு, ஒண்ணுமே நடக்காத மாதிரி இருக்கறது எத்தனை கஷ்டம்னு உனக்குத் தெரியுமா?'' அன்று தனக்கு ஏற்பட்ட அனுபவத்தைச் சொல்லலாமா என்று யோசிக்கையில்,

மணியின் ஓசை பலமாக ஒலிக்க, ''கஷ்டமாத்தான் இருக்கும்'' என்றாள் மீரா அவசரமாக. ''கஷ்டப்படாம எதுவும் இந்த உலகத்திலே கிடைக்காதுன்னு நா நினைக்கறேன் மீனாட்சி. காதல் உள்பட. எழுந்திரு. பிரார்த்தனைக்கு வா. மனசிலே தெளிவு வரும்.''

தன் நாவிலிருந்து எப்படிப்பட்ட பொன் மொழிகள் வருகின்றன என்று நினைத்து அவளுக்குச் சிரிப்பு வந்தது.

''முகத்தைக் கழுவிண்டு வா'' என்று அவள் பிரார்த்தனைக் கூடத்தை நோக்கிச் செல்கையில், மீனாட்சி மிக மெதுவாக எழுந்திருந்தாள். அவளுடைய அழுகையும் பேச்சும் இன்று திகைப்பை ஏற்படுத்தின. அசட்டு மீனாட்சி இன்று அவளுக்கு ஆசானாகிப் போனது விசித்திரம். 'உனக்குப் புரியாது' என்கிறாள் ஒரே வீச்சில். எப்படிப்பட்ட மகத்தான அனுபவம்னு புரியாது. மீனாட்சி எதைக் குறிக்கிறாள் என்று தெரியவில்லை. காதல் என்பதன் வியாக்கியானம் விளங்கவில்லை. மகத்தான அனுபவங்கள் மகத்தான துக்கத்தை விளைவிக்கும் என்று அவள் நம்புவது போல் இருந்தது. ஆனால் அவளுடைய துக்கம் உண்மையானதாகத் தோன்றிற்று. பட்டாம்பூச்சியைப் போல எதிலும் புத்தி லயிக்காமல் வளைய வரும் மீனாட்சிக்குள் இப்படிப்பட்ட ஆழ்ந்த அபிமானங்கள் இருப்பது வியப்பை அளித்தது.

**வாஸந்தி**

**பி**ரார்த்தனை முடிந்து வகுப்புக்குத் திரும்பி அட்டெண்டென்ஸ் எடுக்கும் போதுதான் மீனாட்சி வகுப்பில் இல்லை

என்று தெரிந்தது.

''மீனாட்சி எங்கே?'' என்று ஆசிரியை இரண்டாம் முறை குரல் எழுப்பியதும்தான் ஞாபகம் வந்தது போல ''அவளுக்கு உடம்பு சரியில்லேன்னு படுத்திருக்கா'' என்று யாரோ பின்னாலிருந்து சொன்னார்கள்.

வகுப்புத் துவங்கி சிறிது நேரத்தில் மீரா மீனாட்சியை முழுவதும் மறந்து போனாள். மதிய உணவு நேரத்தின் போது நினைவு வந்தது. வகுப்பிற்கு அதுவரை மீனாட்சி திரும்பியிருக்கவில்லை. தோழிகள் யாருக்கும் தெரியவில்லை. 'க்ளாஸைக் கட் பண்ணணும்னு வேணும்னே படுத்திருப்பா' என்று முகம் சுளித்தார்கள். மீனாட்சியை நினைத்து, மீராவுக்குத் திடீரென்று பச்சாதாபம் ஏற்பட்டது. அவளுக்கு நெருக்கமானவர்கள் யாருமில்லை என்று தோன்றிற்று. அவளுடைய செலவில் சாப்பிட்டுக் கும்மாளமடிக்கப் பெண்களும் அவளை உபயோகித்தார்கள்; கேலி செய்தார்கள். அவளுடைய தனிமை உணர்வுக்கு மணியின் சிநேகிதம் மருந்தாக இருந்திருக்கலாம். அதனாலேயே அவன் மீது ஆக்ரோஷமான பிடிமானம் ஏற்பட்டிருக்கலாம். அவளுடைய அசட்டுத்தன பெருமைகள் கூட ஒரு கவசமாக இருக்கும். 'எங்கேம்மா நேரம் இருக்கு?' என்று தோளைக் குலுக்கும் அவளுடைய அம்மாவுக்கோ, பிஸினஸ் டூரில் இருக்கும் அப்பாவுக்கோ அவளுடைய தனிமை பற்றித் தெரிய வராது, ஏதாவது குரூரமான அதிர்ச்சி ஏற்படும் வரை.

அன்றைய விருந்தைப் பற்றி மீனாட்சி தன்னிடம் எதுவுமே கேட்காதது வினோதமாக இருந்தது. தானும் அன்று அங்கு இருந்ததை மறக்கும் அளவுக்கு அவளுள் ஏதோ சஞ்சலம் ஏற்பட்டிருக்க வேண்டும். சங்கர் ஏதும் சொல்லியிருக்க மாட்டான். அல்லது பஸ் ஸ்டாப்பில் 'நான்தான் மீராவைக் கொண்டு விட்டேன்' என்று புளுகியிருப்பான். இப்படிப்பட்ட பையன்களுடன் சுத்துவதோடு ஒரு பெண் 'காதல்' வேறு கொள்ள வேண்டுமானால் 'காதல்' என்கிற வார்த்தைக்கு அர்த்தமில்லை. 'உன் பிரியமே எனக்குச் சுமையாப் போச்சு' என்பவனிடம் இவள் யாசிக்கிறாள். 'நிராகரித்தால் செத்துருவேன்'. காட், என்ன பிதற்றல்!

**"யா**ரைத் தேடறே மீரா?'' என்ற மைதிலியின் குரலைக் கேட்டு மீரா திரும்பினாள்.

''மீனாட்சி எங்கே மேம்? உடம்பு சரியில்லேன்னு இங்கே படுத்திருக்கறதாச் சொன்னாங்களே?''

மைதிலியின் முகத்தில் இப்பவும் கடுமை படர்ந்தது, மீராவுக்கு வருத்தமாக இருந்தது.

''வீட்டுக்குப் போயிட்டா,'' என்றாள்,

'அனுப்பி விட்டோம்' என்கிற த்வனியில்.

''தனியாவா?'' என்றாள் மீரா கவலையுடன்.

''இல்லே. அவங்க அம்மாவுக்கு போன் பண்ணி வரச் சொன்னோம்.''

மைதிலியுடன் சமீப காலமாக நெருக்கமான பழக்கம் ஏற்பட்டிருந்தும் மீனாட்சியைப் பற்றி விளக்கமாகப் பேசத் தயக்கமாக இருந்தது.

''குட்!'' என்றாள் மெல்ல. ''இன்னிக்கு அவ ரொம்ப அப்செட்டாகியிருந்தா.''

''வயசுக்குத் தகுந்த மாதிரி இருந்தா எந்த அப்செட்டும் ஏற்படாது. வயசுக்கு மீறின விஷயத்திலே புத்தி போச்சுன்னா கோளாறுதான்.''

மைதிலியின் முகம் கடுமையாகத் தெரிந்தாலும் குரலில் துயரம் தொனித்தது. ''அவங்க அம்மா, அப்பாவுக்கு இவளை கவனிக்க நேரமில்லே. என்ன செய்ய முடியும்?''

மேற்கொண்டு மீனாட்சியைப் பற்றிப் பேசுவதற்கு மீராவுக்குக் கூச்சமாக இருந்தது. அன்று சென்று வந்த பார்ட்டியைப் பற்றிக் கூட இவளிடம் பேச முடியாது என்று தோன்றிற்று. மீனாட்சியின் அம்மாவிடம் சொல்வதிலும் ஏதும் அர்த்தமிருக்காது என்ற திடீர்ச் சோர்வுடன் அவள் பேச்சை மாற்றும் எண்ணத்துடன், ''ஹரி இப்ப எப்படி இருக்கான் மேம்?'' என்றாள்.

''இப்பத் தேவலை மீரா, தாங்க்ஸ்'' என்றாள் மைதிலி. ''பழைய நிலைக்கு வந்துட்டான். பரீட்சைக்குத் தயார் செய்ய ஆரம்பிச்சுட்டியா நீ?''

''இன்னிலேர்ந்து ஆரம்பிப்பேன் மேம்'' என்றாள் மீரா மெல்லிய வியப்புடன்.

''குட். கவனமாப் படி. இப்பப் படிப்புதான் முக்கியம். பாக்கி எல்லாம் இரண்டாம் பட்சம். டான்ஸ், பாட்டு கிளாஸ் கூட கொஞ்ச நாளைக்கு நிறுத்தி வைக்கலாம்.''

''இனிமே டான்ஸ் கிளாஸ் இருக்காது. மேம் அமெரிக்கா போறாங்க'' என்று மீரா சிரித்தாள். ''பாட்டு வாத்தியார் காசி யாத்திரை போயிருக்கார்.''

''நல்லதாப் போச்சு'' என்றாள் மைதிலி லேசாக. பிறகு எதேச்சையாகச் சொல்வது போல், ''ஹரிக்கும் பரீட்சை வருது. அதனாலே, மீரா, பரீட்சையெல்லாம் முடியற வரைக்கும் நீ வீட்டுக்கு வராம இருக்கறது நல்லது.''

மீரா திகைப்புடன் மைதிலியைப் பார்த்தாள். மைதிலி சமாதானமாக அவளுடைய தோளில் கை வைத்து, ''ஒண்ணுமில்லே, பரீட்சை சமயத்திலே கவனம் சிதறக் கூடாதுன்னு சொன்னேன்'' என்றாள்.

(தொடரும்)

# உயிர்ப் பலி

'நானே தற்கொலை செய்து கொண்டு இதோ எதிரே படுத்துக் கிடக்கிறேனா?'

நந்தினிக்கு உடம்பு சிலிர்த்தது.

அத்தனை நெருக்கம் ஜெயாவுக்கும் அவளுக்குமிடையே. சிநேகிதிகள். அடுத்தடுத்த வீடுகளில் வாழ்பவர்கள். வாழ்ந்தவர்கள்.

இப்போது ஜெயா வாழவில்லை. இருபத்தெட்டு வயதில் முடிந்து போய் விட்டாள். தானே தன்னை முடித்துக் கொண்டாள். மொட்டை மாடியிலிருந்து குதித்து. ஒற்றைக் கோடாய்க் கூந்தலுக்குள்ளிருந்து வலது கன்னம் வழியே இறங்கிய ரத்தக் கோடு. நேற்றிரவே நேர்ந்த கோடாதலால் இப்போது காலை ஆறு மணிக்குக் காய்ந்து போயிருந்தது. ஒரு பழுப்புத் தடயம். அவ்வளவுதான். இதுவா உயிரைக் குடித்தது? உறையிலிட்ட கத்திபோல் அப்படி ஒரு கொலைத்திறமா இதனுள்?

ஜெயாவின் முகம் அமைதியாக இருந்தது. இது நிச்சயம் மரணத்தின் அமைதிதான், ஜெயாவின் அமைதியல்ல. ஜெயாவுக்கு அமைதி கிடைக்கவில்லை. அதனால்தான் இந்த முடிவுக்கு வந்தாள்.

'ஜெயா, என் தோழி, இப்படி ஒரு எண்ணமிருப்பதாய் என்னிடம் கோடி காட்டியிருக்கக் கூடாதா? உனக்கும் சாவுக்குமிடையே குறுக்குச் சுவராய் நின்றிருப்பேனே!'

''கொஞ்ச காலமாவே ஜெயா ரொம்பச் சோர்ந்து போயிருந்தா. தனியாத் தனியாப் போய் நின்னு பெருமூச்சு விடுவா. ஆனா இப்படி யோசிச்சுண்டிருந்தாள்னு நினைக்கவே இல்லையே!'' என்று ஜெயாவின் தந்தை சுப்ரமணியமும் அவர் மனைவியும் அரற்றினார்கள். ஆனால் விடியற்காலையில்தான். நந்தினி ஒருத்தி மட்டும் பதறி ஓடி வந்த போது மட்டும்தான். ஜெயாவைப் பற்றிய எதுவும் நந்தினியிடமிருந்து ரகசியமில்லை. ''இனியும் எனக்கு வரன் பார்த்து அல்லல்படாதீர்கள். நான் போகிறேன்'' என்று பெற்றோருக்கு ஜெயா எழுதி வைத்திருந்த துண்டுக் காகிதத்தை அவர்களைத் தவிர நந்தினி மட்டும்தான் படித்தாள். பிறகு பெற்றோர் அக் காகிதத்தைக் கிழித்துப் போட்டு விட்டார்கள். துன்பம் மனசைப் பிளக்கும் போது கூட, எச்சரிக்கை உணர்வு போகவில்லை. விபத்தாக மொட்டை மாடியிலிருந்து விழுந்ததாய் இருக்க வேண்டும். தற்கொலை என்றால் வம்பு.



போலீஸ், போஸ்ட்மார்ட்டம்... டாக்டர் சர்டிபிகேட் கிடைப்பது கூடக் கஷ்டமாகி விடும்.

எனவே இப்போது அறையில் வந்து கொண்டிருந்த கூட்டம் கேட்பதற்காக, ''மொட்டை மாடிக் கைப்பிடிச் சுவர் ரொம் பக் குட்டைன்னு எத்தனை நாளாச் சொல் லிண்டிருந்தோம்... உசத்திக் கட்டுன்னா பாவி வீட்டுக்காரர் காதிலேயே போட்டுக் கலே. வீடு மாத்திடணும்னு கூட யோசிச் சோம்... கொடியில் காஞ்ச துணி களை எடுக்கப் போன பொண்ணு இப்படி அநி யாயமாய் அந்தச் சுவத்தில் காலிடறிக் குடை சாய்ஞ்சு...'' என்று உரத்த குரலில் மாற்றி மாற்றிப் பெற்றோரின் இந்த விளக்கம்.

'இவள் என்னுடன் பி. ஏ. வரை ஒன்றாய்ப் படித்தாள். பிறகு பெற்றோர் கல்வியை நிறுத்த, சந்தோஷமாய் நின்று கொண்டாள். நான் எம்.காம் தேறி வங்கி வேலையில் அமர்ந்த பிறகும் நாங்கள் நெருங்கிய தோழிகள்தான். ஆனால் என்

# ஆர். சூடாமணி

என்றார்கள் அவர்கள். எனவே என் ஜெயா திருமணத்துக்காகவே காத்தி ருந்தாள்.

வரன்கள் வராமலில்லை. பெண் பார்க் கும் படலங்கள் தொடர்ந்து நடந்தன. ஆவல், அலங்காரம், மாப்பிள்ளைப் பையன் (வருங்காலக் கணவனோ?) எதிர் பார்ப்பு, ஏமாற்றம், கண்ணீர், சமாதானம், மீண்டும் ஆவல்... இந்த வட்டம்தான் திரும்பத் திரும்ப.

வரதட்சிணை கொட்டிக் கொடுக்க வசதியில்லை. எனவே திருமணமும் இல்லை.

ஒரு சமயம் சோர்வு மிகுந்து ஜெயா அவளிடம் கூறினாள் :

''நான் கல்யாணமாகிப் போகாட்டா என் தங்கைகளுக்கு லைன் எப்படி இளிய ராகும் நந்து?''



''ஏண்டி, நீ படிச்சவதானா? லைனாம் இளியராம். கல்யாணம் ஆற போது ஆகட் டும். உனக்காக மட்டும்னு தாலி கட்ட ஒரு வன் வரபோது அது ஆகும். அப்போத்தான் அது கல்யாணம். உனக்குத் தன்மானம் இல்லே? பணத்தைக் கொடுத்து ஒரு புரு ஷனைச் சம்பாதிக்கிறதை விடக் கன்னி யாவே இருப்பேன்னு சொல்லத் துப்பு இல்லே?'' என்று நந்தினி ஆத்திரமாய்க் கத்தினாள்.

இவ்விதச் சிந்தனை ஏதோ அன்னிய

னிடம் எப்போதும் பரிதாபம்தான் ஜெயா வுக்கு. ''நீ உத்தியோகம் பண்ணி என்னடி பிரயோஜனம் நந்து? கல்யாணத்தைப் பத்தி யோசிக்க மாட் டேங்கிறியே?'' என்ற அங்கலாய்ப்பில் பெற்றோர் அவளிடம் ஊன்றியிருந்த மரபு சார்ந்த மதிப்புக ளனைத்தும் பேசின. திரு மணம்தான் ஒரு பெண்ணின் வாழ்க்கைக் குறிக்கோள்

மொழி போல் ஒலித்திருக்க வேண்டும். ஜெயா குழப்பத்துடன் வெறித்தாள். எவ்வளவு அழகிய முகம்! ஆனால் அந்த அழகு அங்குமிங்குமாய் உட்கார இடம் தேடி அலைவது போல் ஓர் அமைதியின்மை, அந்த முகத்தில் தெரிந்தது.

'கல்யாணக் கனவுகள் இரவில் கண்டு, கல்யாண நினைவுகளுடன் ஒவ்வொரு விடியலும் கண்விழித்தாய். இப்போது கண்மூடி விட்டாய் - நிரந்தரமாக. என்னால் நம்பவே முடியவில்லையேடி ஜெயா! ஒன்றாய்ப் படித்தோம், ஒன்றாய்ப் பழகினோம், பல இரவுகள் ஒருவர் வீட்டில் மற்றவர் தங்கி, ஒரே தலையணையில் தலை வைத்துத் தூங்கினோம். இப்போது நான் இன்னும் மூச்சு விட்டுக் கொண்டிருக்க, நீ மூச்சை முடித்துக் கொண்டாய். என்னால் நம்பத்தான் முடியவில்லை. என் கைக்குள் உன் கை சில்லிட்டுக் கொண்டிருக்கும் இந் நேரத்திலும் என்னால் நம்ப முடியவில்லை. உயிரை விடுமுன் உன் மனம் என்ன பாடுபட்டதோ? அது எத்தகைய நிராசை? எத்தகைய தனிமை? உயிரோடு இருப்பவர்களுக்கு அது புரியத்தான் முடியுமா? உன்னுள் இப்படி ஒரு சோகச் சுமையா என் தோழியே?'

பெற்றோரின் கதறல்களிடையே ஜெயாவின் உடல் உலகினின்று மறைந்தது.

இனி தம் இரண்டாவது மகள் ஸ்வாதிக்கு வரன் பார்க்க வேண்டியதுதான் என்று அடுத்த ஆண்டு சுப்ரமணியம் பேச ஆரம்பித்த போது, நந்தினி கவலையுடன் அவரிடம் சொன்னாள் :

''அதெல்லாம் சரிதான் மாமா, ஆனா கொஞ்சம் ஜாக்கிரதையாச் செய்யுங்கோ. ஸ்வாதியாவது நன்னாயிருக்க வேணுமில்லையா?''

''நானும் அதுக்குத்தான் சொல்றேன். மாசி பிறந்தா அவளுக்கு இருபத்து மூணு முடியறது. இந்தத் தடவை காலங்கடத்த மாட்டேம்மா நந்து! நல்ல வரன் வரப்போ, எவ்வளவு கேட்டாலும் கடனோ உடனோ வாங்கிக் கேட்டதைக் கொடுத்துக் கல்யாணத்தை நடத்திடுவேன்.''

''எதுக்கு மாமா? வரதட்சிணை கொடுத்துத்தான் கல்யாணம் பண்ணணுமா?''

''கல்யாணமே அப்போத்தானேம்மா நடக்கும்? இன்னித் தேதியில் அதை ஒரு விதியாவேதானே எல்லோரும் கடைப்

பிடிக்கறா? மீற முடியுமா?'''

''ஏன் முடியாது? இதுவும் என்ன, கொலை செய்யக் கூடாது, கொள்ளை அடிக்கக் கூடாது, பொய் சொல்லக் கூடாது என்கிறாப் போல், தர்ம அடிப்படையி லான விதியா மீற முடியாதுன்னு சொல்ற துக்கு? வரதட்சிணை வெறும் சமூகப் பழக்கம்தானே மாமா? சமூகப் பழக்கங்கள் சமூகத்துக்குச் சமூகம், அதிலேயே காலத் துக்குக் காலம், மாறுகிற விஷயம்தானே? மீறக் கூடாத புனிதம் அதில் என்ன இருக்கு?''

''இந்த மாதிரி விதண்டாவாதம் பண்ற தனால்தான் முப்பது வயசை நெருங்கற போதும் உனக்குக் கல்யாணமாகலே.''

''இருந்தாலும் சௌக்யமா, சந்தோஷ மாய்த்தான் இருக்கேன்!'' நந்தினி சிரித் தாள். பிறகு, ''இன்னும் உங்களுக்கு ரமா வேற இருக்கா. இந்த ரெண்டு பெண் களுக்காகவும் வரதட்சிணைக்குன்னு கடன் வாங்கி ஏழைமையில் முழுகிட்டா அப்புறம் உங்களுக்கும் மாமிக்கும் என்ன கதி மாமா?''

''பெண்களைப் பெத்தவன் அதைப் பத்தியெல்லாம் கவலைப்பட்டா முடி யுமா? உன் வேலையப் பார்த்துண்டு போ.''

'இவரிடம் பேசிப் பயனில்லை. மனசை மூடிக் கொள்பவர்கள் கண்ணற்ற வர்களை விட அதிக இருட்டில் வாழ்கி றார்கள்.

'ஜெயா...! அந்த இறுதி முகம் என் கண்ணுக்குள் நிற்கிறது. திருமண எதிர் பார்ப்பில் தோற்று, வரதட்சிணையால் வெல்லப்பட்டு, உயிரை மாய்த்துக் கொண்ட என் ஜெயா. அவ்வளவுதானா அவள்? பி.எஸ்ஸி.யில் கணக்கில் எப்போ தும் முதல். மேலே எம். எஸ்ஸி. மாத்ஸ் போயிருக்கலாமோ? பல சமயம் மழையில் நனைந்து நான் ''குளிர்கிறது, வாடி சீக்கிரம்'' என்று ஓடி வந்த போது அவள் நின்று ''மேலே பாரேன் நந்து! மழைக்கும் வெயிலுக்கும் நடுவில் ஒரு ஏழுவர்ண அதிசயம்!'' என்று கைகொட்டிப் பூரித்திருக் கிறாள். அந்தச் சில்விட்ட சடலத்தினுள் ஒரு கணித மேதை அல்லது ஒரு கலை வித்தகி சிறைப்பட்டிருந்தாளா? அதைக் கண்டுபிடிக்க வாய்ப்பளிக்காமல் கல்யா ணம் கல்யாணம் என்று மூளைச் சலவை செய்து சாவுக்கு விரட்டி விட்டார்களே!

'ஜெயா! உன் த ங் ை க ை ய யாவது காப்பாற்றுவேனா கொலைகாரர் களிடமிருந்து?'

''நந்துக்கா, நீங்களும் கூட இருக்

களும். எனக்கு நர்வஸ்ஸாயிருக்கு.''

''ஏன், என்ன விஷயம் ஸ்வாதி?''

''நாளை சாயங்காலம் என்னைப் பெண் பார்க்க ஒரு பார்ட்டி வருது.''

ஸ்வாதி தயக்கத்துடன் அவள் முகத்தைப் பார்த்தாள். நான்கு நாட்கள் முன்பு, ''நீயும் பி.ஏ. படிச்சவள்தான். ஏதாலும் செக்ரடேரியல் கோர்ஸ் பண்ணு. வேலைக்கு முயற்சி செய். நானும் விசாரிக்கறேன், என்றெல்லாம் அறிவுறுத்தியிருந்த நந்தினி அக்கா இந்தக் கல்யாணப் பேச்சுக்கு என்ன சொல்வாளோ?''

நந்தினி மலர்ச்சியுடன் பேசினாள்; ''ரொம்ப நல்லது ஸ்வாதி. நான் கட்டாயம் உன் கூட இருக்கேன். பையனை உனக்குப் பிடிச்சிருந்து, வரதட்சிணை அது இதுன்னு பணம் பிடுங்காத குடும்பமாயும் இருந்தா சந்தோஷமாய்க் கல்யாணம் பண்ணிக்கோ. என் ஆசீர்வாதம் உனக்கு எப்பவும் உண்டு.''

''வரதட்சிணை கேட்டால்?''

நந்தினி அவளை உன்னிப்பாய் நோக்கினாள். பதில் சொல்லவில்லை. ஸ்வாதியின் கண்கள் தாழ்ந்தன.

''வரதட்சிணை தரலேன்னா... கல்யாணம் எப்படிக்கா ஆகும்?''

''இப்படி எல்லாரும் கேக்கறதால்தான் வரதட்சிணைப் பழக்கம் ஒழிய மாட்டேங்கறது.''

''கல்யாணம் முக்கியமில்லேன்னு சொல்றேளா?''

''முக்கியம்தாம்பா. ஆனா எத்தனை முக்கியமாய் இருந்தாலும் அது வாழ்க்கையின் ஒரு பகுதி மட்டும்தானே? முழு வாழ்க்கை இல்லையே!''

''பெண்ணுன்னா கல்யாணம் பண்ணித்தான் ஆகணும்னு எங்கப்பா அம்மா சொல்றா.''

''நிறையப் பேரோட அப்பா அம்மா அப்படித்தான் சொல்றா. ஆனா நமக்கு சுயபுத்தி இருக்கில்லையா? யோசிச்சுப் பாரு. பெண்ணுன்னாலே கல்யாணம், கல்யாணம்னாலே வரதட்சிணை அப்படின்னு ஒரு சங்கிலியை விடாப்பிடியாய்ப் பிடிச்சுண்டிருக்கறதால்தானே எத்தனையோ பெண்களின் வாழ்க்கை பாழாப் போறது? பெண் சிசுக் கொலை, பெண் கருக் கொலை என்றெல்லாம் நடக்கறது? நாம் பெண்களாயிருந்துண்டு இதை எதிர்க்காம இருக்கலாமா?''

நந்தினி ஜன்னல் வழியே வெட்ட வெளியை வெறித்தாள்.

''நம்ம ஜெயா கூட அந்த மூடநம்பிக்கைக்குத்தானே தன்னைப் பலிகொடுத்துண்டா? எந்த ஆம்பிளை இப்படிப்பட்ட ஓர் உயிர்ப் பலிக்குத் தகுதியானவன்?''

குரல் உடைந்து மேஜை மேல் முகம் கவிழ்த்துக் கொண்டவளைப் பார்த்துக் கொண்டே ஸ்வாதி வெகு நேரம் நின்றிருந்தாள்.

அத்தனை பேர் முன்னால் எழுந்து நின்று ''எனக்கு இந்தச் சம்பந்தம் பிடிக்கலை'' என்று ஸ்வாதி தெளிவாக அறிவித்த போது, எரிமலைகள் மௌனமாய் வெடித்தன.

அதிர்ச்சி யுகம் கடந்தது. மீண்டும் பேச்சு வரப் பெற்ற போது, சுப்ரமணியம் கர்ஜித்தார்; ''பிடிக்கும் பிடிக்காதுன்னு சொல்ற அளவுக்குப் பெரிய மனுஷியாய்ட்டியாடி நீ?''

''அவா கொடுத்த நீள லிஸ்டை நீங்களும்தானேப்பா பார்த்தேள்? ஒழுங்கான கல்யாணம்னா பண்ணிக்கறேன். வியாபாரக் கல்யாணம் எனக்கு வேணாம்.''

வந்திருந்த அத்தனை பேரும் முகம் சிவக்க எழுந்தார்கள். ''ரொம்ப நன்னாயிருக்கு பெண்ணை வளர்த்திருக்கற லட்சணம்!'' போகத் தொடங்கினார்கள்.

''ஸார் ஸார், போகாதீங்கோ, அவ குழந்தை, ஏதோ தெரியாத்தனமா... அம்மா, கொஞ்சம் நில்லுங்கோ...''

போய் விட்டார்கள்.

சுப்ரமணியம் கனலாக நந்தினியின் பக்கம் திரும்பினார். ''உன் போதனையா?''

''இல்லே மாமா. ஸ்வாதிக்குள் ளேர்ந்து ஸ்வாதிதான் பேசறா.''

''முதல் பையனுக்கே இவள்... ஜெயாவை எத்தனை பேர் வந்து பார்த்தா! ஒரு தடவையாவது இப்படிப் பேசியிருப்பாளா? வரதட்சிணைப் பழக்கம் தப்புன்னு யாருக்குத் தெரியாது? ஆனாலும் குழந்தை தன்னையே அழிச்சுண்டாளே தவிர...''

''அழிய வேண்டியது அந்தப் பழக்கம் மாமா! பெண்ணில்லை.''

''இப்போ வாய மூடிண்டு எழுந்து போறயா இல்லையா?''

''ஏன், நந்து சொல்றதில் என்ன தப்பு?''

சுப்ரமணியம் அதிர்ச்சியுடன் திரும்பிப் பார்த்தார். பேசியது அவர் மனைவி. இது நாள் வரை அவரை எதிர்த்து ஒரு வார்த்தை பேசி அறியாதவள்.

அவர் மலைத்து மௌனமானார்.

நந்தினி அமைதி கொண்டாள். இரு தலைமுறைப் பெண்கள் தலை உயர்த்தி விட்டார்கள்.

'ஜெயா, என் தோழி, உன் மரணம் வீண் போகவில்லை.'

# சிவகாமியின் சபதம்

## நாற்பத்தைந்தாம் அத்தியாயம்
## மகேந்திரர் அந்தரங்கம்

அன்றிரவு மகேந்திர பல்லவரும் அவருடைய பட்ட மகிஷி புவன மகாதேவியும் கண்ணுறங்கவே யில்லை.

அரண்மனை மேல் மாடத்தில், வெள்ளி நட்சத்திரங்களை அள்ளித் தெளித் திருந்த வானவிதானத்தின் கீழ் அமர்ந்து, சென்ற காலத்தையும் வருங்காலத்தையும் பற்றி, அவர்கள் பேசிக் கொண்டிருந் தார்கள்.

''தேவி! என் வாழ்நாளின் இறுதிக் காலத்தில் இப்படி எனக்கு ஆசாபங்கம் உண்டாகுமென்று நான் எதிர்பார்க்கவே யில்லை. என்னுடைய கனவுகளெல்லாம் சிதைந்து போய்விட்டன. துரதிர்ஷ்டத் துக்கு உள்ளானவனை அவனுடைய அந்த ரங்க சிநேகிதர்கள் கூடக் கைவிட்டு விடு வார்கள் என்று அரசியல் நீதி கூறுவது எவ்வளவு உண்மை! அதோ வானத்தில் ஜொலிக்கும் நட்சத்திரங்கள் முன்னேயெல் லாம் என்னைப் பார்த்து, 'மகேந்திரா! உன்னைப் போன்ற மேதாவி இந்தப் பூவுலகில் வேறு யார்? உன்னைப் போன்ற தர்மவான், குணபரன், சத்ருமல்லன், கலைப்பிரியன் வேறு யார்?' என்று புகழ் மாலை பாடுவது வழக்கம். இப்போது அதே நட்சத்திரங்கள், என்னைப் பார்த்துக் கண்ணைச் சிமிட்டிக் கேலிச் சிரிப்புச் சிரிக்கின்றன. 'மகேந்திரா! கர்வபங்கம் போதுமா? உன்னுடைய அகட விகட சாமர்த்தியங்கள் எல்லாம் விதியின் முன்னால் பொடிப் பொடியாகப் போன தைப் பார்த்தாயா?' என்று கேட் கின்றன...''

மகேந்திரருடைய உடம்பும் உள்ளமும் வெகுவாக நொந்திருந்தன என்பதைச் சக்கர வர்த்தினி அறிந்தவளாதலால், அவர் மனத்தை மேலும் புண்படுத்த விரும்ப வில்லை. ஆயினும் அவளை அறியாமல் இந்த வார்த்தைகள் வெளிவந்தன. ''பிரபு! நாமாகச் செய்து கொள்ளும் காரியத்துக்கு விதி என்ன செய்யும்?''

இதைக் கேட்ட மகேந்திர பல்லவர் சோகப் புன்னகை புரிந்து, ''மனிதர் களாகிய நாம் எவ்வளவு சாமர்த்தியமாகக் காரியம் செய்தாலும் விதி வந்து குறுக்கிட்டு எல்லாவற்றையும் கெடுத்து விடத்தான் செய்கிறது. என்னுடைய காரி யங்களைக் கெடுப்பதற்கு விதியானது சிவகாமியின் ரூபத்தில் வந்தது!'' என்றார்.

''ஆ! அந்த ஏழைப் பெண்ணின் மீது ஏன் பழியைப் போடுகிறீர்கள்? அவள் என்ன செய்வாள்?'' என்று இரக்கம் ததும் பிய குரலில் கூறினாள் பல்லவர் தலைவி புவன மகாதேவி.

''பெண்ணுக்குப் பெண் பரிந்து பேசு கிறாய். அது நியாயந்தான். ஆனாலும், ஆயனர் மகளின் காரணமாகத்தான் என்னு டைய உத்தேசங்கள் எல்லாம் பாழாய்ப் போயின. சிவகாமியிடமிருந்து மாமல்ல னைப் பிரித்து வைக்க நான் முயன்று வந்தேன். அதற்காக என்னவெல்லாமோ சூழ்ச்சிகளும் தந்திரங்களும் செய்தேன். நான் செய்த சூழ்ச்சிகளும் தந்திரங்களும் பயன்படாமல் போயின. விதிதான் கடைசி யில் வெற்றி பெற்றது.''

''விதியானது உங்களுடைய நோக்கத் தைத்தானே நிறைவேற்றி வைத்தது? அந்தப் பெண்ணிடமிருந்து மாமல்லனைப் பிரிப்பதற்குத் தாங்கள் எத்தனையோ ஏற்பாடுகள் செய்தீர்கள். விதி உங்கள் ஒத்தாசைக்கு வந்து அவளை வாதாபிக்கே கொண்டு போய்விட்டது. அப்படியிருக்க, அவளைத் தேடி அழைத்துக் கொண்டு வருவதற்கு நீங்கள் ஏன் பிரயத்தனம் செய்ய வேண்டும்? தங்களுடைய காரியம் எனக்கு

அமரர் கல்கி

விளங்கவில்லையே?'' என்று புவன மகா தேவி உண்மையான திகைப்புடன் கேட்டாள்.

''அதைத்தான் அப்போதே சொன்னேன். பழைமையான பல்லவ குலத்திலே பிறந்ததற்குத் தண்டனை இது. சிவகாமியைத் திருப்பிக் கொண்டு வராவிட்டால் பல்லவ குலத்துக்கு என்றென்றைக்கும் மாறாத அவமானம் ஏற்படும். புலிகேசி காஞ்சிப் பல்லவனை முறியடித்துவிட்டு ஊர் திரும்பியதாகப் பெருமையடித்துக் கொள்வான். சிவகாமி வாதாபியில் இருக்கும் பட்சத்தில் புலிகேசியின் ஜம்பத்தையே உலகம் நம்பும்படி இருக்கும். சிவகாமியின் புகழ் ஏற்கெனவே இலங்கை முதல் கன்யாகுப்ஜம் வரையில் பரவியிருக்கிறது. மாமல்லபுரத்துச் சிற்பங்களையும், சிவகாமியின் நடனத்தையும் வந்து பார்த்துவிட்டுப் போக வேண்டுமென்று நானே ஹர்ஷவர்த்தனருக்கு ஓலை அனுப்பியிருந்தேன். அப்படிப்பட்ட சிவகாமி வாதாபியில் சிறை வைக்கப்பட்டிருந்தால் உலகம் என்ன நினைக்கும்? பல்லவ குலத்துக்கு அதைக் காட்டிலும் வேறு என்ன இழிவு வேண்டும்?''

சுவாமி! தாங்கள் தலையில் அணியும் கிரீடத்தைச் சில சமயம் நான் கையிலே





## அருள்வாக்கு

அநேக ஸமயாசாரங்களை, சடங்குகளைச் சீர்திருத்தக்காரர்கள் ஒதுக்குவதற்கு ஈஸியாக ஒரு காரணம் சொல்லி விடுகிறார்கள் : "மனஸ் சுத்தமாக இருக்க வேண்டியதுதானே முக்யம்? 'ரிசுவல்' எதற்கு? இந்த 'ஃபார்மாலிடீஸ்' எதற்கு?" என்கிறார்கள்.

மனஸைத் தனியாக விட்டால், அது கட்டுப்படாமல் கெட்ட வழிகளில்தான் போய்க் கொண்டிருக்கும். எவனாவது ஆயிரம், பதினாயிரத்தில் ஒருத்தனுக்குத்தான் காரியத்தில் போகாதபோதும் மனஸ் கட்டுப்பட்டு, நல்லதிலேயே போய்க் கொண்டிருக்கும். மற்றவர்களுக்கு ஒரு காரியத்தைக் கொடுத்து, 'காரியத்வாரா' மனஸை பகவானிடமோ, ஜனஸேவையிலோ திருப்பி விட்டால்தான் உண்டு. இதைக் கவனித்துத்தான் ஆசார அநுஷ்டானங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன.

மனஸைத் தனியாக விட்டால் என்று மட்டுமில்லை; அதை நாம ஜபம், ஸ்தோத்ரம் என்று வாக்குடன் சேர்த்து விட்டாலுங்கூடக் கொஞ்ச நேரத்துக்கு அப்புறம் அது பிய்த்துக் கொள்கிறது. அதனால், மனோ-வாக்-காயம் என்றபடி, மனஸை வாக்கு மட்டுமின்றி, சரீர கார்யத்தோடும் பிணைத்தே சடங்குகளைக் கொடுத்திருக்கிறது. மந்திரங்களை வாக்கால் சொன்னபடியே ஹோமம் என்ற கார்யத்தைப் பண்ணுவது; ஸஹஸ்ரநாமத்தை வாக்கால் சொன்னபடியே அர்ச்சனை என்ற கார்யத்தைப் பண்ணுவது - என்று வைத்திருக்கிறது.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

எடுத்துப் பார்த்திருக்கிறேன். அதனுடைய கனத்தை எண்ணி, 'இவ்வளவு பாரத்தை எப்படித்தான் சுமக்கிறீர்களோ!' என்று ஆச்சரியப்பட்டிருக்கிறேன். ஆனால், இந்த இரண்டு மூன்று வருஷத்திலேதான் எனக்குத் தெரிந்தது, தலையிலே அணியும் மணிமுடியைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு பாரத்தைத் தாங்கள் இருதயத்திலே தாங்க வேண்டியிருக்கிறதென்று. 'இராஜ்ய பாரம்' என்று உலக வழக்கிலே சொல்வது எவ்வளவு உண்மையான வார்த்தை?" என்று சக்கரவர்த்தினி உருக்கமான குரலில் கூறினாள்.

"ஒரு காலத்தில் அந்தப் பாரத்தை நான் வெகு உற்சாகத்துடன் தாங்கினேன். இப்போது அதுவே தாங்க முடியாத பெரும் பாரமாய் என் இருதயத்தை அமுக்குகிறது. தேவி! மூன்று வருஷத்துக்கு முன்பு வரையில் நான் ஆகாசக் கோட்டைகள் கட்டி வந்தேன். ஆம்; காஞ்சிக் கோட்டையை அலட்சியம் செய்து விட்டு ஆகாசக் கோட்டைகள் கட்டினேன். இந்தப் பூவுலகத்தைச் சொர்க்க பூமியாகச் செய்து விடலாம் என்று கருதினேன். என்னுடைய மூதாதையர்களையெல்லாம் மனத்திற்குள் நிந்தித்தேன். வீணாகச் சண்டை பூசல்களிலும் இரத்தக் களறிகளிலும் அவர்கள் காலத்தைக் கழித்தார்களே என்று வருத்தப்பட்டேன். மாமல்லபுரத்தில் எல்லாச் சமயங்களுக்கும் அழியாத கற்கோயில்கள் கட்டத் தொடங்கினேன். கோயில்கள் கட்டி முடிந்ததும் ஹர்ஷனையும் புலிகேசியையும் அழைக்க நினைத்திருந்தேன். இந்த ஆகாசக் கோட்டைகளையெல்லாம் அந்தச் சளுக்க அரக்கன் பொடிப் பொடியாக்கி விட்டான். அவன் தொண்டை மண்டலத்துக் கிராமங்களில் வைத்த தீ சீக்கிரத்தில் அணையப் போவதில்லை. பல்லவர் படை வாதாபிக்குப் போய்ப் புலிகேசியை முறியடித்தாலொழியப் பல்லவ குலத்துக்கு நேர்ந்த அவமானம் தீரப் போவதில்லை. இது என் காலத்தில் நிறைவேறா விட்டால், மாமல்லனுடைய காலத்திலாவது நிறைவேறியாக வேண்டும்."

"பிரபு! என் வீர மகன் நிச்சயமாகத் தங்கள் மனோரதத்தை நிறைவேற்றுவான். பல்லவ குலத்துக்கு நேர்ந்த பழியைத் துடைப்பான்!" என்று புவனமகாதேவி பெருமிதத்துடன் கூறினாள்.

(தொடரும்)

பொன்விழா
போட்டிக் கவிதை

# ஞாபகங்கள்




எல்லாம் நீ மறந்திருப்பாய்....
ஒருநாள்
உன் தலையிலிருந்த
ரோஜாவைப் பிடுங்கி
தெருவில் எறிந்தேன்...
நீ அழுது புரண்டாய்
தெரு ரெண்டுபட்டது
உன் அம்மாவும் என் அம்மாவும்
அடித்துக் கொண்டார்கள்.

எல்லாம் நீ மறந்திருப்பாய்...

பிறகொரு நாள்
தோட்டத்தில் மலர்ந்த
ரோஜாவை எடுத்து
உன் கூந்தலில் சூட்டினேன்
நீ அழவுமில்லை, புரளவுமில்லை
ஆனாலும் கூட
உன் அப்பாவும்
என் அப்பாவும்
அடித்துக் கொண்டார்கள்
தெரு ரெண்டுபட்டது.

எல்லாம் நீ மறந்திருப்பாய்....

காலம் தலைகீழாய்த்
தடம் புரண்டது...
நான் மனைவிக்காக
மல்லிகை வாங்கக் கற்றுக் கொண்டேன்
உனக்காக உன் கணவன்
''ரோஜா'' வாங்கும் அதே கடையில்!...

எல்லாம் நாம் மறந்து விட்டோம்....

நேற்று...
என் மகள் அழுது புரண்டாள்
உன் மகன்
ரோஜாவைப் பிடுங்கி
தெருவில் வீசியதற்காக.
என் மனைவியும்
உன் கணவனும்
அடித்துக் கொண்டார்கள்
தெரு ரெண்டு பட்டது.
நானும் நீயும்
விட்டேத்தியாய்
வேடிக்கை மட்டும் பார்த்தோம்.
நாம் என்ன எல்லாமுமா
மறந்து விட்டோம்?

- ராஜாராம்
(அறிமுக எழுத்தாளர்)

# சந்தேகக் கோடு

''உம் பேர் என்னம்மா?'' அம்மா கேட்டாள்.

''சுகந்தி.''

உதடு பிரிந்து பளீரிட்ட பற்களும், இனிமையான குரலும்... நான் மனப்பூர்வமாகச் சம்மதம் சொல்லிவிட்டேன். அப்பா, அம்மாவிற்கும் சுகந்தியைப் பிடித்து விட்டது.

அப்பொழுதே நாங்கள் சம்மதம் தெரிவித்து, பேசி முடிவு செய்து, சென்ற வாரம் நிச்சயதார்த்தமும் நடந்துவிட்டது. அடுத்த மாதம் பதினெட்டாம் தேதி திருமணம்.

என்ன செய்வதென்று தெரியவில்லை எனக்கு. கல் விழுந்த குளமாய் மனத்துக்குள் குழப்ப அலைகள். காரணம் இன்று காலையில் என் பெயருக்கு வந்திருந்த மொட்டைக் கடிதம்.

**அன்புள்ள நண்பர் கௌதமிற்கு,**

**நீங்கள் திருமணம் செய்து கொள்ளப் போகும் சுகந்தியைப் பற்றிய ஒரு சுவாரஸ்யமான உண்மையைச் சொல்லவே இந்தக்கடிதம். சுகந்தியும், அவளுடன் பணிபுரியும் சுரேஷும் தீவிரமாகக் காதலித்துக் கொண்டிருந்தார்கள். இருவரின் தொடர்பும் எல்லை மீறிப் போனது. அதன்பின் சுரேஷ் கைகழுவிவிட்டான். இப்பொழுது பாவம் நீங்கள் மாட்டிக் கொண்டீர்கள். வழுக்கி விழுந்த பெண்களுக்கு இது போன்று மறுவாழ்வு கிடைப்பது அவசியம். உங்களின் திருமணத்திற்கு என்னுடைய நல்வாழ்த்துக்கள்.**

**இப்படிக்கு,**
**நலன் விரும்பி.**

கடிதமும், 'கவரி'ன் மேல் இருந்த என் முகவரியும் 'டைப்' செய்யப்பட்டிருந்தன. தபால் முத்திரை, கடிதம் உள்ளூரிலேயே 'போஸ்ட்' செய்யப்பட்டிருந்ததைத் தெரிவித்தது.

ஒரு மாதத்திற்கு முன்தான் நான், அப்பா, அம்மா மூவரும் போய்ச் சுகந்தியைப் பெண் பார்த்து வந்தோம். டிபன் தட்டைக் கையில் ஏந்தியவாறு நடந்துவந்த அவளின் அழகு, முதல் பார்வையிலேயே என்னை வீழ்த்திவிட்டது.

சிவப்பு நிறம், செதுக்கி வைத்தாற் போன்ற உடற்கட்டு, அளவான உயரம். டிபனை நீட்டும் பொழுது என்னைப் பார்த்த அவளின் முகத்தை நன்றாகப் பார்த்தேன். சிரிக்கின்ற கண்களும், கூர்மையான நாசியும், செழுமையான கன்னமும், ரோஜா இதழ்களைச் சேர்த்து வைத்தாற் போல உதடும்.....

சுகந்தியைப் பார்த்துவிட்டு வந்ததிலிருந்து நான் அவள் நினைவிலேயே லயித்துக் கொண்டிருந்தேன். அவளைப் பற்றிய கனவுகளும், எதிர்பார்ப்புகளும் மனத்துக்குள் நிறைந்திருக்க, திருமண தினத்தை நோக்கி நான் ஆவலாய்க் காத்திருக்கும் இந்த நேரத்தில் இப்படியொரு கடிதம் தலையில் பாராங்கல்லாய் வந்து இறங்கியிருந்தது. என்னுடைய சந்தோஷமெல்லாம் இதைப் படித்த விநாடியே காணாமல் போய்விட்டது.

யார் எழுதியது? இதில் இருக்கும் விஷயம் உண்மையாக இருக்குமா?

அலுவலகத்தில் இருக்க முடியாமல் அரைநாள் விடுமுறை சொல்லிவிட்டு மதியம் வீட்டிற்கு வந்துவிட்டேன்.

''ஏம்ப்பா கௌதம் சீக்கிரமாவே வந்துட்ட?'' அம்மா கேட்டாள்.

''மனசு சரியில்லேம்மா'' என உண்மையைச் சொல்லாமல் ''உடம்பு சரியில்லேம்மா. அதான் வந்துட்டேன்'' என்றேன்.

''என்னாச்சி?''

''லேசாத் தலைவலி. என் 'ரூம்'ல போய்ப் படுத்துக்கறேன். தூங்கினாச் சரியாயிடும்!'' ஆனால் நான் தூங்காமல் யோசித்தேன்.

'சுகந்தி வேறு ஒருவனைக் காதலித்தாளா....? அதுவும் எல்லை மீறிய காதலா....? அதை மறைத்து விட்டு என்னைக் கல்யாணம் செய்து கொள்ளச் சம்மதித்திருக்கிறாளா?''

உதாதிபன்

'அவள் முகத்தைப் பார்த்தால் அப்படித் தெரியவில்லையே! கள்ளங் கபடம் இல்லாமல்.....'

'முகத்தில் கள்ளங் கபடம் இல்லாமல் இருக்கலாம். உள்ளத்தில்....?'

இரண்டுவிதமாக எனக்குள் தர்க்கித்துக் கொண்டேன். உண்மையிலேயே தலைவலி வரும்போல இருந்தது.

இந்தக் குழப்பத்திற்கு என்ன முடிவு? உள்ளுக்குள்ளேயே போட்டு மருகுவதை விட இதைப் பற்றி நேரடியாகச் சுகந்தி யிடம் கேட்டு விடுவதென முடிவு செய் தேன்.

மாலை நான்கு மணிக்குமேல் எழுந்து முகம் கழுவி உடைமாற்றிக் கொண்டு, சுகந்தி பணிபுரியும் அலுவலகத்தை அடைந்து, அவளின் வருகைக்காக வெளியே காத்திருந்தேன்.

சிறிது நேரத்தில் தோளில் 'லெதர்-பேக்'குடன் வந்தாள், என்னைப் பார்த்த தும் ஆச்சரியமாகிப் புன்னகை செய்தாள்.

''உங்கிட்ட கொஞ்சம் தனியாப் பேச ணும்!'' என்றேன். இருவரும் எதிர்த்தாற் போல் இருந்த ஹோட்டலுக்குள் நுழைந் தோம்.

**சு**கந்தி என்னையே பார்த்துக் கொண் டிருந்தாள்.

''இன்னைக்குக் காலையில எனக்கு ஒரு 'லெட்டர்' வந்தது. யார் அனுப்பி



ளாங்க, என்னன்னு தெரியல!''

பாக்கெட்டில் இருந்து எடுத்து நீட்டினேன்.

அவள் அதை வாங்கிப் படித்தாள். நான் எதிர்பார்த்தது போல, அவளுடைய முகத்தில் அதிர்ச்சியோ, சலனமோ இல்லை. மெலிதாய்ச் சிரித்தாள்.

''எங்க ஆபீஸ்ல சுரேஷ்னு ஒருத்தன் வேலை செய்துக்கிட்டிருக்கறது உண்மை. என்மேல அவனுக்கு ஒருவிதக் காதலோ, ஈடுபாடோ.... இருக்கறதும் உண்மை. மத்ததெல்லாம் பொய். எனக்கு அவனைக் கண்டாலே பிடிக்காது. ஆனாலும் அடிக்கடி வந்து தொந்தரவு பண்ணிக்கிட்டேயிருப்பான். நான் எவ்வளவு சொல்லியும் அவன் மாறல. ஒருநாள் அத்துமீறி நடந்துக்க முயற்சி பண்ணினான். அவனை அறைஞ்சிட்டேன். 'என்னை அவமானப் படுத்திட்டயில்லே. இதுக்கு நீ அனுபவிப்பே. வேற யாரை எப்படிக் கல்யாணம் பண்ணிக்கறேன்னு பார்க்கறேன்'னு சவால் விட்டான். கல்யாணத்தை நிறுத்தி, பழி வாங்கறதுக்காக அந்த சுரேஷ் பண்ணின வேலையாத்தானிருக்கும் இது.''

''லீவ் இட்! இந்த 'லெட்டரை' அப்பவே கிழிச்சுப் போட்டிருப்பேன். இருந்தாலும் உங்கிட்டயும் கேட்டுட்டா நமக்குள்ள எந்தவித ஒளிவு மறைவும் இருக்காதுங்கற எண்ணத்தில்தான் வந்தேன். மத்தபடி என்னைத் தப்பா நினைச்சுக்காதே!'' என்றேன்.

''சேச்சே... நீங்க நேரடியா வந்து கேட்டதுக்கு நான் சந்தோஷப்படறேன். எந்த விஷயத்தையும் மனசுக்குள்ளேயே போட்டுப் புழுங்கறதைவிட வெளிப்படையாப் பேசிடறதுதான் நல்லது. எனக்கும் அதுதான் பிடிக்கும்.''

காப்பி வந்தது, குடித்தோம்.

திரும்பிவரும் பொழுது என் குழப்பம் தெளிந்து விட்டாற்போல இருந்தது. என்றாலும் இரவு படுக்கையில் சாய்ந்து தூங்கும் முன் யோசித்த பொழுது வேதாளம் முருங்கை மரத்தில் ஏறிக் கொண்டது.

'சுகந்தி சொன்னது உண்மையாக இருக்குமா? நேரடியாகக் கேட்டால் எந்தப் பெண்தான் தன் கடந்த காலக் களங்கத்தை ஒத்துக் கொள்வாள்? கடிதத்தைப் படித்ததும் எவ்விதச் சலனமுமில்லாமல் சிரித்தாளே... வெளிப்படையான நடிப்பாயிருக்குமோ....?'

மீண்டும் சஞ்சலங்கள், சந்தேகங்கள்... மனித மனம்!

**ம**றுநாள்,

அலுவலகத்தில் என் கவலையை என் முகத்தில் படித்துவிட்டு, ''கௌதம்....

''**எ**ங்கள் மனோன்மணீயம் சுந்தரனார் பல்கலைக் கழகத்தில் படித்துப் பெற்ற பி.எட். பட்டத்தைக் கேரளாவில் அங்கீகரிக்க மறுத்து விட்டார்கள். எங்கள் பல்கலைக்கழகத்தில் தரப் போகும் எல்லாப் பட்டங்களுக்கும் இதுதான் கதி என்றால், எங்கள் பல்கலைக் கழகத்தின் கீழ்வரும் நாற்பத்தெட்டுக் கல்லூரிகளைச் சேர்ந்த மாணவ, மாணவியரின் எதிர்காலமும் என்னாகுமோ என்று இப்போதே அடிவயிற்றைக் கலக்குகிறது, சார்!'' என்று நெல்லை நகருக்குள் நாம் நுழைந்தவுடனேயே சம்பந்தப்பட்ட மாணவ, மாணவியர் வந்து முறையிட்ட போது, நமக்கே அதிர்ச்சியாக இருந்தது.

''உங்கள் பல்கலைக் கழகத்தில் கொடுக்கப்பட்ட பி.எட். பட்டத்தைக் கேரளாவில் ஏன் அங்கீகரிக்க மறுத்தார்கள்?''

''காரணம், எங்கள் பல்கலைக் கழகத்தைப் பல்கலைக் கழக மானியக் குழு இன்னமும் அங்கீகரிக்கவில்லை என்பதுதான்!''

**க**டந்த செப்டெம்பர் 1990-ல் ஆரம்பிக்கப்பட்ட இந்தப் பல்கலைக் கழகத்தை இன்னமும் ஏன் பல்கலைக் கழக மானியக் குழு அங்கீகரிக்கவில்லை? அதற்குக் காரணம் இருக்கிறது!

ஒரு பல்கலைக் கழகம் புதிதாகத் துவங்கப்படுகிறது என்றால், அதற்கான கட்டட வசதி, நூலகம், ஆய்வுக் கூடங்கள், ஹாஸ்டல் வசதி மற்றும் விளையாட்டு மைதானம் போன்ற அடிப்படை வசதிகளெல்லாம் கட்டாயம் இருக்க வேண்டும். அவையும் ஏனோதானோவென்று இல்லாமல், சுமார் மூன்று கோடி ரூபாய் மதிப்புக்காவது இருக்க வேண்டும். கூடவே, அப்பல்கலைக் கழகத்தில் பத்துத் துறைகள் ஆரம்பிக்கப்பட்டு, அவற்றில் நூறு ஆசிரியர்களாவது நியமிக்கப்பட்டிருக்க வேண்டும். அப்போதுதான் பல்கலைக் கழக மானியக் குழு அதை அங்கீகரிக்கும்.

இவையெல்லாம் மனோன்மணீயம் சுந்தரனார் பல்கலைக் கழகத்துக்குச் சுத்தமாகக் கிடையாது. கம்ப்யூட்டரில் முதுகலை அறிவியல் பட்டப் படிப்பெல்லாம் ஆரம்பித்ததே தவிர, கம்ப்யூட்டரே கிடையாது. ஆசிரியர்களும் போதுமான அளவுக்கு நியமிக்கப்படவில்லை.

''எம். ஏ. ஆங்கில இலக்கியத்தில் ஒரேயொரு மாணவருக்குச் சொல்லிக் கொடுக்க நான்கு ஆசிரியர்கள்; எம். ஏ. வரலாறு படிக்கும் ஒன்பது மாணவர்களுக்கு நான்கு ஆசிரியர்கள் என்றாலும் மற்ற அறிவியல் துறைகளில் போதிக்கப் போதுமான ஆசிரியர்கள் இல்லை. மொத்த ஆசிரியர்களின்

எண்ணிக்கையே பதி னான்குதான். ஆ ன ா ல், ஆசிரியரல்லாத நிர்வாக ஊழியர்களின் எண்ணிக் கையோ முப்பத்தெட்டு! இந்த நிலையில் நாங்கள் என்ன படித்திருப்போம் என்பதைச் சுலபமாகப் புரிந்து கொள்ளலாம்!'' என்றார்கள் மாணவர்கள்.

''இத்தனை எதற்கு சார்? பல்கலைக் கழகத்துக் கென்று ஒரு கட்டடம் கூட இல்லையே. இப்போதைக் குத் தாலுகா ஆபீஸ் கட்ட டத்தில்தான் பல்கலைக் கழக ஆபீஸ் இயங்கிக் கொண்டிருக்கிறது. மற்ற படி வகுப்பறைகள், திரு நெல்வேலி - பாளையங்



☛ இங்குதான இயங்குகிறது மனோன்மணீயம் சுந்தரனார் பல்கலைக் கழகம்...

# மனோன்மணீயம் சுந்தரனார் பல்கலைக் கழகம் கின்னஸ்ஸில் இடம் பெறுமா?

கோட்டையில் எங்கெங்கு காலியான கட்டடங்கள் இருக்கின்றனவோ அங்கெல் லாம் நடக்கின்றன. இதன் காரணமாகத் தான் எம்.எஸ்ஸி. கம்ப்யூட்டர் படிப்புக் காக வாங்கப்பட்ட மிக மிகச் சாதாரண - ஆரம்ப நிலைக் கம்ப்யூட்டர்களைக் கூட நாங்கள் பல மாதங்கள் வரை பயன்படுத்த முடியாமலே போனது. இதைவிடக் கேவலம், எங்கள் முதல் துணைவேந்தர் ஓய்வு பெற்று ஆறு மாதங்களுக்கு மேலாகியும், அடுத்த துணைவேந்தரைக் கூட அரசு இன்னும் நியமிக்காததுதான்!''

இவையெல்லாம் தெரியாமலா, தமிழக அரசு ஒரு பல்கலைக் கழகத்தை ஆரம்பித்தது? நெல்லைக்கு அருகிலுள்ள அபிஷேகப்பட்டியில் பல்கலைக் கழகத்துக் கான நிலமும் ஆரம்ப வேலைகளுக்காக 2.87 கோடி ரூபாயும் அரசு ஒதுக்கத்தான் செய்தது.

ஆனால், அந்த நிலத்தைப் பெறு வதில் கல்வித் துறைக்கும் கால்நடைப் பராமரிப்புத் துறைக்கும் தகராறு. இரண்டு துறைகளுமே தத்தமது நிலைகளில் உறுதி காட்டுவதால், பாதிக்கப்பட்டிருப்பவர்கள் பல்கலைக் கழக மாணவ, மாணவியர்!

இன்னொரு விஷயமும் பரவலாகப் பேசப்படுகிறது. 'பல்கலைக் கழகத்தை ஆரம்பித்தது, அப்போதைய முதல்வர் கருணாநிதி என்பதால், இந்தச் சிக்கலைத் தீர்ப்பதில் இன்றைய முதல்வருக்கு ஆர்வம் இல்லை' என்பதுதான் அது.

இதே நிலை நீடித்தால், இந்தப் பல்கலைக் கழகத்தின் கீழ் பயிலும் நாற்பத் தெட்டு கல்லூரி மாணவ, மாணவியரின் பட்டங்கள், மற்ற பல்கலைக் கழகங்களால் அங்கீகரிக்கப்படாத நிலை ஏற்பட்டு, 'மனோன்மணீயம் சுந்தரனார் பெயரில் தமிழக அரசே ஒரு போலி பல்கலைக் கழகத்தை நடத்துகிறது' என்று கின்னஸில் இடம்பெறும் வாய்ப்பிருக்கிறது.

- பிரின்ஸ்

# ஸ்வரம் பாடும் குழந்தை!



**பா**ளையங்கோட்டையிலுள்ள மூன்றரை வயது அனுஷா, அழகாக ஸ்வரம் பாடுகிறாள். வயலினிலோ, ஹார்மோனியத்திலோ ராகத்தை வாசித்தால், அதன் ஸ்வரத்தைப் பிசகாமல் கூடவே ஒப்பிக்கிறாள். இதை இரண்டு வயதிலிருந்தே செய்து வருகிறாளாம் அனுஷா. எப்படி?

''இவளுடைய பாட்டி - என் அம்மா, இசை வகுப்பு நடத்துகிறார். அதைத் தொட்டில் குழந்தையாக இருக்கும்போதே கேட்டுக் கேட்டுத்தான் இப்படி ஸ்வரம் பாட ஆரம்பித்திருக்கிறாள் என்று கருதுகிறோம். இவளுடைய புத்திசாலித்தனம் எங்களுக்கு ஆச்சரியத்தையும் சந்தோஷத்தையும் அளித்தாலும் இப்போது நாங்கள் ஏதும் இவளுக்கு இசை வகுப்புகள் நடத்துவதில்லை. அது இவளுடைய வயதுக்கு மிகவும் அதிகப்படியான சுமை என்று, இவளுடைய வளர்ச்சிக்காகக் காத்திருக்கிறோம்'' என்கிறார் அனுஷாவின் தாய் ரெஜினா.

# 'என் ப்ரியமானவளே...'



**ஜெ**யலலிதா, தமது வீட்டு வாசலுக்கு வரும் போது கூட, அவர் வீட்டு

---

ஏண்டா ஒரு மாதிரியாயிருக்கே. எனி ப்ராப்ளம்?'' என்று கேட்டான் அர்விந்த். நெருங்கிய நண்பன்.

'இவனிடம் சொல்லலாமா... சொன்னால்தான் மனத்தில் உள்ள அழுத்தம் குறையும்.'

''ஆமா அர்விந்த் ஒரு பிரச்னை'' என அவனைத் தனியே அழைத்துப் போய் கடிதத்தைக் காட்டிச் சொன்னேன். நேற்று மாலை சுகந்தியைச் சந்தித்ததையும் சொன்னேன்..

''அவங்கதான் இது பொய்னு சொல்லிட்டாங்களே, அப்புறம் ஏன் வீணா 'வொர்ரி' பண்ணிக்கறே?'' என்றான் அர்விந்த்.

''உங்கிட்ட வெளிப்படையாச் சொல்றேன் அர்விந்த். சுகந்தி பொய் சொல்லியிருக்கலாமோன்னு சந்தேகப்படறேன். சம்பந்தப்பட்ட சுரேஷையே பார்த்து இதைப் பற்றிக் கேட்டுடலாமான்னு யோசிக்கறேன்.''

''நோ... நோ.... உண்மையோ, பொய்யோ அவன் இந்த 'லெட்டர்'ல இருக்கிறதைத்தான் சொல்வான்.''

''அப்ப வேற யார் மூலமாவது உண்மையைத் தெரிஞ்சுக்கணும்.''

''உன்னோட 'வுட்பி' எங்க வேலை பார்க்கறாங்க?''

சொன்னேன்.

''அப்படியா... அங்கதான் என்னோட ப்ரண்ட் நாராயணன்னு ஒருத்தன் இருக்கான். அவனை விசாரிச்சிடலாம் விடு!''

''எப்ப?'' என்றேன்.

''இன்னிக்குச் சாயந்திரமே!''

மாலை ஆறுமணிக்கு நான், அர்விந்த், நாராயணன் மூவரும் அர்விந்த்தின் அறையில். நாங்கள் விஷயத்தைச் சொன்னதும் ''சுகந்தியா... அவங்க ரொம்ப நல்ல 'டைப்'பாச்சே. சுரேஷ்தான் அவங்ககிட்ட வீணா வம்பிழுத்துக்கிட்டிருப்பான். ஒரு நாள் அவன் ஏடாகூடமா நடக்கப் போய் அவங்க அவனை அறைஞ்சிட்டாங்க. இப்படியிருக்கறப்ப ரெண்டு பேரும் காதலிச்சாங்கன்னு சொல்றது சுத்த 'ஹம்பக்''' என்றான் நாராயணன்.

எனக்கு மூச்சுத் திணறலில் இருந்து விடுபட்டது போல இருந்தது, உள்ளத்தில் மறுபடியும் சந்தோஷம் வந்து ஒட்டிக் கொண்டது. இரண்டு நாட்களாக எத்தனை

வாட்ச்மேன் 'வாசலுக்கு வருகை தரும் புரட்சித் தலைவியே வருக! வருக!' என்று போஸ்டர் அடித்து ஒட்டினாலும் ஒட்டுவார் என்று சிலர் கேலி பேசுகிறார்கள். அவர்களெல்லாம் நெல்லை நகருக்குச் சென்று, அங்குள்ள சில போஸ்டர்களைப் பார்த்தால், என்ன சொல்வார்களோ தெரியவில்லை. 'என் ப்ரியமானவளே, நீ பத்தாம் வகுப்பு பாஸ் செய்ததற்கு வாழ்த்துகிறேன்!' இப்படியொரு போஸ்டர் கூட நெல்லையில் ஒட்டப் பட்டதாம்! ஆக, நெல்லைவாசிகள் தங்கள் காதலைக் கூடக் கடிதத்தில் அல்லாமல், போஸ்டர் அடித்துத்தான் சொல்லுவார்கள் போல!

## ஆஷ் துரை சமாதி

நெல்லை கலெக்டரான ஆஷ் துரையை வாஞ்சிநாதன் சுட்டுக் கொன்றது எல்லாருக்கும் தெரியும். சுட்டுக் கொல்லப்பட்ட ஆஷ் துரையின் உடல் எங்கு அடக்கமானது?

பாளையங்கோட்டையிலுள்ள இங்கிலிஷ் சர்ச் சாலையிலுள்ள, குளோரிண்டா சர்ச் வளாகத்திலிருக்கும் கல்லறை



(cemetery) யில் தான் ஆஷ்துரையின் உடல் புதைக்கப்பட்டிருக்கிறது. அவருடைய சக அலுவலர்களால் எழுப்பப்பட்ட சமாதியில், 1911 ம் ஆண்டு ஜூன் மாதம் 17 ம் தேதி 'அரசியல் கொலையாளி' ஒருவனால் சுட்டுக் கொல்லப்பட்டதாகப் பொறிக்கப் பட்டுள்ளது! இப்போதும் இங்கிலாந்திலிருந்து வரும் சிலர், அவர் சமாதிக்கு மெழுகுவர்த்தி ஏற்றிவைத்து அஞ்சலி செய்வதாகச் சொல்கிறார்கள்.

---

கவலை, எத்தனை தவிப்பு!

அன்று இரவு நான் நிம்மதியாகத் தூங்கினேன். கனவு வந்தது. கனவில் சுகந்தி வந்தாள்.

அடுத்த நாள், மதியம் இரண்டு மணியிருக்கும்.

ப்யூன் வந்து ''சார்.... உங்களைப் பார்க்க சுகந்தின்னு ஒரு 'மேடம்' வந்திருக்காங்க!'' என்றான்.

இனிய அதிர்ச்சியுடன் நான் வெளியே வந்து, காத்திருந்த அவளை நெருங்கி, 'ஹலோ!'' என்றேன்.

''எனக்காக ஒரு பத்து நிமிஷம் ஒதுக்க முடியுமா... ஒரு முக்கியமான விஷயம் பேசணும்.....'' என்றாள்.

இருவரும் அலுவலக முகப்பில் இருந்த வேப்பமரத்தை அடைந்தோம்.

''என்ன சுகந்தி?''

''நான் சொல்றதைக் கேட்டு கோபப் படாதீங்க. எனக்கு உங்களைத் திருமணம் செய்துக்க விருப்பமில்ல... திருமண ஏற்பாட்டை நிறுத்திடலாம்.''

ஆயிரம் 'வாட்ஸ்' மின்சாரம் தாக்கிய அதிர்ச்சியில் ''ஏன் சுகந்தி?'' என்றேன்.

''நீங்க அந்த 'லெட்டரை'க் கொண்டு வந்து காட்டி, எங்கிட்டயே அதைப் பத்திக் கேட்டதுக்காக உங்களை நான் தப்பா நினைக்கல, சொல்லப் போனா சந்தோஷப் பட்டேன். ஆனா நான் சொன்ன பதிலை நம்பாம, மத்தவங்ககிட்ட விசாரிச்சிருக்கீங்க. எப்படியோ எனக்கு இது தெரிய வந்துடிச்சி. என்னோட வார்த்தையில நம்பிக்கையில்லாம, நான் பொய் சொல்லியிருப்பேனோன்னு சந்தேகப்பட்டு, எப்ப என்னைப் பத்தி மூணாவது மனுஷர்கிட்ட விசாரிச்சீங்களோ... அப்பவே எல்லாம் முடிஞ்சி போச்சி. நாளைக்கு இன்னொருத்தன் வந்து 'அந்த லெட்டர்'ல இருக்கறது உண்மைன்னு சொன்னா மறுபடியும் உங்களுக்குச் சந்தேகம் வரும். வீணான அவஸ்தைகள் உருவாகும். இல்லற வாழ்க்கைக்கு ஆதாரமே ஆணுக்கும், பெண்ணுக்கும் ஒருத்தர் மேல ஒருத்தருக்கு இருக்கிற நம்பிக்கைதான். அப்படிப்பட்ட அடிப்படை நம்பிக்கையே இல்லாம அமையற இல்லறம் சந்தோஷமா இருக்காதுங்க. என்னை மன்னிச்சிடுங்க... குட் பை!''

சொல்லிவிட்டு சுகந்தி 'விடு விடு' வெனப் போய்விட்டாள்.

நான் பொடிப் பொடியாய் உதிர்ந்தேன்.

# டான்கலிலியோ

## 8

'க்ரீன் வ்யூ' வாசலில் இரண்டு கான்ஸ்டபிள்கள் பாரா பார்க்க -

ஹோட்டலினுள்ளே டி. எஸ். பி சாமுவேல் மராத்தன் முயற்சியாகப் பல சுற்றுக்களில் விசாரித்துக் கொண்டிருந்தார். டான்கலிலியோ பற்றி பிரகாஷ் பிரஸ்தாபித்ததும் சாமுவேல் சற்றும் தாமதியாமல், சென்னை டிஜிபி அலுவலகத்தைத் தொடர்பு கொண்டு விட்டார். நாளைக் காலையில் ஏசிபி தேவதேவன் வருகிறாராம்.

முந்தின இரவு, கத்தி ஆசாமியைப் பார்த்த இடத்திற்கு, பிரகாஷ் அவரை அழைத்துச் சென்றான். எதிர்பார்த்தபடி கத்தி மாயமாகி விட்டிருந்தது. தாக்கியவன் தரையில் தடயம் தவற விடவில்லை என்பதும் தெளிவாகியது.

'குட் ஹெல்த்' நர்சிங் ஹோமிற்குச் சென்று விசாரித்தார் சாமுவேல். காலை 4:45 அளவில் வேன் வேண்டி, போன் வந்ததை உறுதிப்படுத்தினார்கள். ஆனால் ஆம்புலன்ஸை ஆஸ்பத்திரி அனுப்பவில்லையாம். ஏன்? ஆம்புலன்ஸ் வேன் வேண்டாமென்று 'ஹோட்டலிலிருந்து' இரண்டு நிமிடம் கழித்து மற்றொரு போன் கால் வந்ததாம். 'பேஷண்ட்' இறந்து விட்டதாகக் காரணம் சொல்லப்பட்டதாம்.

சே. என்ன ஒரு சாதுர்யமான துல்லியத் திட்டம்! அதிகாலையில், அனைவரும் அசந்த குளிர் வேளையில், ஆம்புலன்ஸ் ஆசாமிகளாகக் கடத்தல்காரர்கள் வந்து, சிந்துஜாவை மயக்கப்படுத்திக் கொண்டு செல்கையில், மற்றொருவன் கஸ்டமர் 'போர்வையில்' வீண் தகராறு புரிந்து, ரிசப்ஷனிஸ்டின் கவனத்தைக் கவர்ந்து நகரவொட்டாமல் செய்ய...

''அவ காணாம போனதுக்கு நான்தான் சார் காரணம்! கதவு தட்டின சப்தம் கூடத் தெரியாம தூங்கின நான், பாவி. இப்ப இழந்துட்டுத் தவிக்கிறேன்'' என்றான் கண்ணீர் மல்க.

''வருத்தப்படாதீங்க பிரகாஷ்!'' அவன் மனம் படும் பாட்டை அவரால் புரிந்து கொள்ள முடிந்தது. ''இவ்வளவு தூரம் துணிஞ்சு செய்யறவனுங்களுக்கு - நீங்க எழுந்திருந்தாலும் - உங்களைச் சமாளிக்கச் சாய்க்கிறது ஒண்ணும் பெரிய காரியமில்லை.''

மேலும் விசாரணை தொடர்ந்தது. நேரம் விரைந்து கொண்டிருந்தது.

பிரகாஷ் பித்துப் பிடித்தாற்போல் தன் அறையில் முடங்கியிருந்தான். தவித்தான். எங்கே இருக்கிறாள் என் கண்மணி? பாவிகளிடம் என்ன பாடுபடுகிறாளோ? பயந்த சுபாவம்டா அவளுக்கு... என் செல்லத்தை ஒன்றும் செய்துடாதீங்க...

'இந்த பில்லர் ராக் எவ்வளவு மெஜஸ்டிக் பாருங்க பிரகாஷ் - உங்களை மாதிரி டவரிங்....'

'ஆ... ஐஸ்!'

'அந்த உயரமான பாறைல நம்ம பெயர்களைப் பொறிக்க முடிஞ்சா எவ்வளவு நல்லா இருக்கும்.... இந்தப் பாறை மாதிரிதான் நம்ம காதலும்... உறுதியானது; அழிவில்லாதது.'

'என்ன திடீர்னு சிரிக்கிறே சிந்து?'

'நேத்து கோக்கர்ஸ் வாக்ல 'நடந்தது' நினைப்பு வந்ததுப்பா.'

'எஸ். அந்தக் குழந்தை தன் அம்மாகிட்டருந்து உன்கிட்டத் தாவியது ஆச்சரியம்தான்.'

'கொள்ளை அழகுப்பா அது. அந்த மாதிரி குழந்தை ரெண்டு பெத்துக்கணும். அதுங்களுக்கு விதம்விதமா டிரெஸ் செய்து அழகு பார்க்கணும். காமிக்ஸ் படிக்கக் கதை சொல்லி, ஹைடு அண்டு சீக் விளையாடணும். விஷமம் செய்தா அப்பாகிட்டச் சொல்லிருவேன்னு பயமுறுத்தணும். அப்புறம் -'

கனவும் காதலும் கலந்த கணங்கள் அவை... ஹூம்.. எப்போது திரும்புவாய் சிந்து? விரைவாய் வா சிந்து. ஆயிரம் ஆண்டுகள் ஆரோக்யமாய் வாழலாம் வா. ப்ச. உன்னை எங்கே என்று தேடுவேன்?

அவனுள் தாங்க இயலாத வேதனை வெட்ட, விளக்குக் கூடப் போடாமல் அறை இருளினுள் வெகுநேரம் உட்கார்ந்திருந்தான்.

போன் ஒலித்தது. சிந்துஜா கிடைத்து விட்டாளோ.. போலீஸ் போன் செய்கிறதோ... பாய்ந்து சென்று ரிசீவரை எடுத்தான்.

''ஹலோ... பிரகாசா? சிந்துஜா பத்தி ஒரு மெசேஜ் சொல்லணும்'' என்றது ஒரு குரல் மென்மையாக.

பத்மா ரவிசங்கர்

''எஸ்'' என்றான் நடுக்கமுடன்.

''உன் அறை போன் சேஃப் இல்லை. போலீஸ்காரனுங்க 'டாப்' செய்திருக்க லாம். ரிசப்ஷன்ல சிவப்பு போன்ல இப்ப பேசறேன். அது ஆப்பரேட்டர் தொடாத டைரக்ட் லைன்.''

ஓடினான். அடைந்தான். ஒலித்தது. எடுத்தான். கேட்டான்.

''நீ யாருடா ராஸ்கல் பேசறது?'' சிவப்புப் போனிற்கு நீளமான ஒயர் இருக் கவே ரிசப்ஷனின் ஒரு மூலைக்கு ஒதுங்கி யிருந்தான்.

''நான்தாம்பா சிந்துவைக் கடத்தின வன் பேசறேன்!''

பிரகாஷ் வெகுண்டு சரமாரியான திராவக வார்த்தைகளால் அவனை அர்ச் சித்து முடித்ததும், ''மனைவி பேர்ல என்ன பாசம்பா உனக்கு!'' என்றது எதிர்முனை எகத்தாளமாய்.

''அடேய்! உ ன க் கு என்னடா வேணும்? அவளை... அவளை...''

''இதுவரை ஏதும் செய்யலை! நான் சொல்ற மாதிரி நீ நடந்துக்கிட்டா உன் சிந்துஜா பூக்கணக்காத் திரும்பி வந்து ருவா.''

''என்ன செய்யணும் சொல்லு'' என் றான் படபடப்பாக. உணர்ச்சியில் பற் களைக் கடித்தான்.

''சொல்றேன். அதுக்கு முன்னே ஒரு சின்ன டெமான்ஸ்டிரேஷன்! உன் ஆருயி ரின் குரல் கேட்க வேணாமா?''

சில நொடிகள் அல்லது சில யுகங்கள் மறுமுனையில் மௌனம். பிரகாஷ் மூச்சைப் பிடித்துக் கொண்டான்.

''பிரகாஷ்! பிரகாஷ்... எனக்கு... எனக்குப் பயமாயிருக்குப்பா... அப் பப்போ மயக்கப்படுத்தி இருட்டுல அடைச்சு வெச்சு... உங்களைத் திரும்பப் பார்ப்பேனா...''

அலறலில் ஆரம்பித்து தீனமாக கேவலில் முடிந்த குரல். பிரகாஷின் உதிரம் உறைந்தது; கரம் நடுங்கி யது.

''ப் ரூ ஃ ப் ஓகே வாப்பா துரை?'' என்றான் அந்த மென் குரலோன்.

''அவ மேல ஒரு சிறு நிறல் விழுந்தாக் கூட...'' ஆவேசமான கோபத்தில் மூக்கு வாங்கிற்று அவ னுக்கு. ''யூ வோண்ட் கெட்டவே வித்திட். உல கத்தின் எந்த மூலையில் இருந்தாலும் உன்னைத் தேடிப் பிடித்து நசுக்கிருவேன்!''

''வீர சபதம் முடிஞ்சுதா?'' அவன் குர லில் அலட்டலில்லாத அலட்சியம். ''ஆல் ரைட். இப்ப பிஸினஸ் பேசுவமா? பத்து லட்ச ரூபா கொடுத்துரு. உன் சிந்துஜாவை விடுதலை செய்துடறேன்!''

கேவலம் பத்து லட்ச ரூபாய்க் காகவா... அவனால் நம்ப முடியவில்லை. சட்டென்று தன்னுள் நிம்மதி பரவுவதை உணர்ந்தான். அப்பாவிற்கு இது ஒரு சாதா ரணத் தொகை. நிச்சயம் மறுக்க மாட்டார். இந்தத் தொகையை அந்த அற்பனிடம் வீசி விட்டால் ஆபத்து நீங்கி விடும்; சிந்து வந்து விடுவாள். தயக்கமின்றிச் சம்மதம் தெரிவித்தான்.

''ஆங். அதுதான் புத்திசாலித்தனம்! சொன்னபடி கேளு துரை. சம்சாரத்தை சேதாரமில்லாம சேர்த்துடறேன், என்ன?''

''பணத்தை எங்கே கொண்டு வந்து தரணும்?'' என்றான் அமைதியாக.

''நாளை மறுநாள் - அதாவது புதன் கிழமை நைட்டு ஏழு மணிக்குப் பொட்டி எடுத்துக்கிட்டுத் தனியா வரணும் துரை'' என்றவன், எங்கே எப்படி என்று மேலும் விவரம் அளித்து விட்டு இறுதியில், ''ராங் பண்ணாம பணத்தை வைச்கட்டுப் போனா சிந்துஜா விடுதலை. மீறி இந்த விஷயத் தைப் போலீஸ் ம வ னு ங் க கிட்டச் சொல்லி டி ரி க் ஸ் காமிச்சே, அவ உ ட ம் பு ல ருந்து உயிர் விடு த லை ய ா யி ரும்! சா க் கி



ரதை'' என்ற எச்சரிக்கையுடன் வைத்து விட்டான்.

இரவு ஏழரை மணி அளவில் கதவு தட்டப்பட்டது. அப்பா!

இறுகிய முகத்துடன் ராஜசேகர் அறைக்குள் பிரவேசித்தார். இரண்டு சூட்கேஸ்களைச் சுமந்து வந்த பையனை அனுப்பிய பின் அறைக் கதவைத் தாளிட்டார். திரும்பினார். மகனைக் கூர்ந்து பார்த்தார்.

''நம்ம பாதையில குறுக்கிடற அந்தக் கலிலியோவைக் கூசாம வெட்டணும்டா!'' என்று கடுப்பாகத் தன்னை மறந்து வெடித்தவர், சட்டென்று இறுக்கம் தளர, அவன் அருகே வந்தார். ஆதரவாக அவன் தோள் பற்றினார். பரிவுடன் நோக்கினார்.

''வழியில டிஎஸ்பியைப் பார்த்து விவரம் கேட்டுட்டுத்தான் வர்றேன். கவலைப்படாதே பிரகாஷ். கண்டுபிடிச்சுருவாங்க. தேவதேவன்னு ஒரு துடிப்பான ஆபீஸரை அனுப்பறதா டிஜிபி சொல்லியிருக்கார்.''

''தேவையில்லைப்பா!'' என்றவன் பத்து லட்சம் கேட்கப்பட்ட விவரம் சொன்னான்.

''நெனைச்சேன்'' என்றார் ராஜசேகர். ''பணத்துக்காகத்தான் இருக்கும்னுட்டு, நம்ம செஸ்டுலருந்து இருபது லட்ச ரூபா கேஷ் கொண்டு வந்திருக்கேன் மை சன்!'' என்று தான் கொணர்ந்த இரு சூட்கேஸ்களையும் சுட்டிக் காட்டினார்.

தன் சோகத்தையும் மீறி அவருடைய முன்யோசனையில் வியந்தான்.

''நமக்கு வேற வழியில்லைப்பா. அவன் கேட்ட மாதிரி பத்து லட்சம் கொடுத்துட்டு நம்ம பொண்ணை மீட்டுக்க வேண்டியதுதான்'' என்றவர் கண்களை மூடிக் கொண்டார்.

''களைப்பா டாடி?''

''ஊம். சரியான நரக நாளப்பா. பாக்டரில சிக்கல். ஒரு ஏஜன்சி காண்ட்ராக்ட் சரியாப் படியலை. ஈவினிங் வரை போராடிட்டு ஃப்ளைட் பிடிச்சு மதுரை வந்து - அங்கிருந்து டாக்சி பிடிச்சு ஓடோடி வர்றேன்'' என்றார் ஆயாசமாக மூச்சு விட்டு.

''படுத்து ரெஸ்ட் எடுங்க. காலைல பேசிக்கலாம்'' என்றான். தந்தைக்கு உதவியாகத் தான் விளங்காத போது, தொல்லை மட்டும் தருவதா என்று அவனுள் ஓர் உறுத்தல்.

செவ்வாய் காலை ஒன்பது மணிக்கு ஆஜரான ஏசிபி தேவதேவன் முகத்தில் திறமை சுடர் விட்டதைக் கவனித்தான் பிரகாஷ். உடன் சாமுவேல்.

அனைவருக்கும் காப்பி வரவழைக்கப்பட்டது. ஏசிபி நேரடியாக விஷயத்துக்கு வந்தார்.

பிரகாஷின் க ண் க ளை ஊடுருவிப் பார்த்தவாறு கேட்டார் : ''அந்த கிட்நாப்பர் ரான்சம் கேட்டுப் போன் செய்தானா மிஸ்டர் பிரகாஷ்?''

''இல்லை சார்!'' என்றான் சற்று

## திருநெல்வேலி அல்வா:

# சுவையின் ரகசியம்



திருநெல்வேலி என்றதுமே பலருக்கும் பளிச்சென நினைவுக்கு வருவது அல்வாதான்! அதற்கு மட்டும் என்ன அப்படியொரு சிறப்பு? ''எல்லாம் தாமிரபரணித் தண்ணீரால் வருகிற சுவைதான்'' என்கிறார், பிஜ்லி சிங்.

திருநெல்வேலி பஸ்நிலையத்துக்கு அருகிலேயே திருநெல்வேலி அல்வா விற்கப்பட்டாலும், நெல்லையப்பர் கோயிலுக்கு எதிரிலுள்ள 'இருட்டுக் கடை அல்வா'தான் அல்வாவுக்கு ஒரு சிறப்பை உண்டாக்கிய கடை. அதை அறுபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு துவங்கியவர் பிஜ்லி சிங்கின் அப்பா, கிருஷ்ணா சிங் என்பது ஆச்சரியமான விஷயம்!

பிஜ்லி சிங்கின் முன்னோர்கள் ராஜஸ்தானைச் சேர்ந்தவர்கள். சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு தென்னாட்டுக்குக் குடிபெயர்ந்து வந்தவர்கள். குறுநில மன்னர்களிடமும் ஜமீன்தார்களிடமும் காவல் வீரர்களாகப் பணியாற்றியவர்கள். மன்னர் பரம்பரை, ஜமீன்தார் முறைகளெல்லாம் படிப்படியாக மறையத் துவங்கியபோது, பிழைப்புத் தேடி பல்வேறு ஊர்களிலும் வந்து செட்டில் ஆனார்கள். அப்படி வந்து நெல்லையில் குடியேறியவர்கள்தான் பிஜ்லி சிங்கின் முன்னோர்கள்.

''என் தந்தையார் முதலில் இனிப்புக் கடை என்று பொதுவான கடையாகத்தான் ஆரம்பித்தார். அதில் அல்வா மட்டும் அனைவரிடமும் பி ர ப ல ம ா க வே, கடையை மொத்தமும் அல்வாக் கடையாகவே மாற்றிவிட்டார்!''

''அல்வாவின் ருசிக்குத் தாமிரபரணித்



☛ இருட்டுக்கடை அல்வா: உள்ளே : பிஜ்லி சிங்

தண்ணீர்தான் முக்கிய காரணம் என்று எப்படிச் சொல்கிறீர்கள்?''

''அனுபவம்தான். அதனால்தான் வேறு ஊர்களில் செய்யப்படும் அல்வாக்களுக்கு இந்த ருசி வருவதில்லை.''

''அல்வாவுக்கு உபயோகிக்கும் பொருள்களில் ஏதேனும் சிறப்பு உண்டா?''

''சிவப்பு நிற சம்பாக் கோதுமையைப் பயன்படுத்துகிறோம். அதை கிரைண்டரில் அரைப்பதில்லை. கையாலேயே அரைக்கிறோம். சுத்தமான நெய்யையே பயன்படுத்துகிறோம்.''

''பக்குவம் பார்த்துச் செய்வது யார்?''

''என் மனைவி சுலோசனா பாய்தான். அதோடு நாங்கள் இன்று செய்யும் அல்வாவை இன்றே விற்பனை செய்வதில்லை. அடுத்தநாள்தான் செய்கிறோம். இதுவும் எங்கள் கடை அல்வாவின் சுவைக்கு ஒரு காரணம்.''

''உங்கள் கடைக்கு 'இருட்டுக் கடை' என்று எப்படி பெயர் வந்தது?''

''நாங்கள் இன்னும் எங்கள் கடையில் வெறும் அறுபது வாட்ஸ் பல்ப் ஒன்றைத்தான் எரியவிடுகிறோம். என் தந்தையார் காலத்தில் பயன்படுத்திய அதே ஓலைப் பெட்டியைத்தான் இன்றைக்கும் கல்லாப் பெட்டியாகப் பயன்படுத்துகிறோம். சொல்லப் போனால் என் தந்தையார் யாரிடம் நெய் வாங்கினாரோ, அவருடைய மகனிடம்தான் நாங்கள் இப்போது நெய் வாங்கிக் கொண்டிருக்கிறோம். இதில் ஏதாவதொன்று மாறினாலும் சுவை மாறிவிடுமோ என்கிற பயமும் செண்டிமெண்டும்தான் காரணம்.''

''கடையை மாலை ஐந்து மணிக்கு மேல்தான் திறக்கறீர்கள்? ஏன் முழுநேரமும் விற்பனை செய்யக் கூடாது?''

''முழு நேரமும் விற்பனை செய்ய வேண்டுமென்றால் நிறையச் செய்ய வேண்டியதாகிவிடும். உற்பத்தி அதிகரிக்க வேண்டுமானால். அல்வாவின் செய்முறைகளை நவீனமயமாக்க வேண்டும். நவீனமாக்கினால் இந்தச் சுவை போய்விடும்; பெயரும் போய்விடும். இந்த நவீன யுகத்திலும் எல்லாவற்றையும் கைப்பக்குவமாகவே செய்வதால்தான், எங்கள் அல்வா அதே சுவையுடன் இருக்கிறது!'' என்றார் பிஜ்லி சிங்.

- ஆர். எஸ்.

அவசரமாக.

''சொல்லாதேன்னு மிரட்டினாங்களா? தைரியமாச் சொல்லுங்க.''

''இதுவரை தொடர்பு கொள்ளலை.''

''ஐ சி'' என்றார் யோசனையாக. ''ஆக, கடத்தினவனுடைய மோடிவ் இன்னும் நமக்குத் தெரியலை இல்லையா?''

மையமாகத் தலையாட்டினான் பிரகாஷ், முகத்தில் உணர்ச்சி காண்பிக்காமல்.

''ஆல்ரைட். அச்சரபாக்கம் அருகே ஒரு கார் உங்களை ஃபாலோ செய்ததுன்னு

The following particulars regarding the ownership of 'KALKI' the Tamil Weekly newspaper, are published, as called for by Rule 8 of the Registration of Newspapers (Central) Rules 1956.

FORM IV

1. Place of Publication : Madras
2. Periodicity of Publication : Weekly
3. Name of printer : V. Murali
   Nationality : Indian
   Address : AA-117, Shanthi Colony, Anna Nagar, Madras - 600 040
4. Name of publisher : V. Vaidyanathan
   Nationality : Indian
   Address : 6-A, Warren Road, Mylapore, Madras - 600 004
5. Name of Editor : K. Rajendran
   Nationality : Indian
   Address : 1, Fifth Street, Lake Area, Nungambakkam, Madras - 600 034
6. Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital : Bharathan Publications Private Limited, 84/1-C, Race Course Road, Guindy, Madras - 600 032.

I hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

1.3.1992

V. Vaidyanathan
Publisher

டிஎஸ்பிகிட்டச் சொன்னீங்களாம். அந்தக் கார் நம்பர் தெரியுமா?''

பிரகாஷ் எச்சரிக்கையானான். அவனுக்கு அந்தக் கார் எண் ஞாபகத்தில் இருந்தது. ஆனால் சொல்லாமல் மறைப்பது உத்தமம் என முடிவு செய்தான். இந்தப் போலீஸ்காரர்களைத் தெரியாதா? மீட்கிறேன் என்று சொல்லி சொதப்பி விடுவார்கள். 'சிந்துஜா உயிருடன் திரும்ப வேண்டும். பத்து லட்சம் என்ற எளிய வழியைச் சிக்கலாக்கிக் கொள்ளக் கூடாது. கடத்தியவனின் கோபம் சம்பாதித்துக் கொள்ளக் கூடாது. ''நம்பர் ஞாபகமில்லை'' என்றான்.

''இட்ஸ் ஓகே பிரகாஷ். அச்சரபாக்கம் ஸ்டேஷன்ல குறிச்சிருக்காங்களான்னு விசாரிக்கிறேன்.''

சட். சரியான விடாக்கண்டன். இந்த விஷயத்தை நேற்றைய பதற்றத்தில் சாமுவேலிடம் சொன்னதற்காக நொந்து கொண்டான் பிரகாஷ்.

''சிங்க அட்டை மாத்திரம் வெச்சுக்கிட்டுக் கவிலியோதான் காரணம்னு சொல்ல முடியாது.''

''பின்னே?'' என்றார் ராஜசேகர் ஆத்திரமுடன். ''முதல்ல அவனைப் பிடிக்கிற வழியைப் பாருங்க ஏசிபி. என் சிட் பண்டைக் கொள்ளையடிச்சான். இப்போ என் குடும்பத்தையே கலக்கறான். ப்ளடி டான்கவிலியோ'' என்று உறுமினார்.

''ரிலாக்ஸ் டாட்!''

''பல கோணங்களையும் நாங்க பார்க்கணும் சார். வேறு யாரேனும் டான் பெயரைப் பயன்படுத்தலாமில்லையா? உங்களுக்கு யார் மேலயாவது சந்தேகம் இருக்கா பிரகாஷ்?''

''இல்லை சார்.''

''ரிசப்ஷனிஸ்டு எப்படி சாமுவேல்?''

''சிம்ஸ் டு பி க்ளீன் தேவா. நர்சிங் ஹோம்ல போன் வந்ததை உறுதி செய்யறாங்களே...''

''இப்படி யோசியுங்க சாம். உண்மை தெரியறவரை நம்ம தொழில்ல எல்லாரையும் சந்தேகப்பட்டுக்கிட்டுத்தான் இருக்கணும்'' என்றார் தேவதேவன்.

மேலும் சில கேள்விகளுக்குப் பின் விடைபெறுமுன் தேவதேவன், ''அவங்க உங்களுக்கும் குறி வெச்சிருக்கலாம். எச்சரிக்கையாயிருங்க' பிரகாஷ்'' என்றவர் அவசர உதவிக்கு அவரைத் தொடர்பு கொள்ளும் தொலைபேசி எண் தந்தார்.

அவர்கள் அகன்றதும் ராஜசேகர், ''இவங்களை நம்பறது வேஸ்ட் பிரகாஷ். விசாரணைங்கற பேர்ல வெட்டியாப் பொழுதை ஓட்டுவாங்க. புதன் கிழமைன்னு கிட்நாப்பர் கெடு வெச்சுட்டான். இந்த இரண்டு நாள்ல போலீஸால ஒண்ணும் கிழிச்சுற முடியாது. காதும் காதும் வெச்சாப்ல பணத்தைக் கொடுத்துட்டு சிந்துஜாவை மீட்கற வழியைப் பார்ப்போம்,'' என்றார்.

அன்று மாலை. ஒரு முன்னோட்டமாகச் செயல்பட்டுப் பார்ப்பது என்று கிளம்பினான் பிரகாஷ். ஹோட்டல் வாசலிலிருந்த பாரா போலீசார் இருவரும், இவனைக் கவனியாமல், எங்கோ பராக்குப் பார்த்தவாறு பேசிக் கொண்டிருந்ததைக் காணவும் சற்று உற்சாகம் அடைந்தான்.

பத்து நிமிடம் நடந்தபின், லேசாகக் கழுத்தைத் திருப்பி, வந்த வழியைப் பார்த்தான். அதிர்ந்தான்.

சற்றுத் தொலைவில் - பாரா பார்த்த கான்ஸ்டபிள்களில் ஒருவன் பிரகாஷைப் பின்தொடர்ந்தபடி.... தான் சந்தேகப்பட்டது சரிதான். எல்லாம் அந்த தேவதேவனின் வேலையாகத்தான் இருக்கும். அவரின் தந்திரம் புரிந்தது. ஆக, ஆபத்து காத்திருக்கிறது. கவலையானான். தர்ம சங்கடத்தில் தவித்தான்.

முதுகில் போலீஸ் வைத்துக் கொண்டு எப்படி 'இரகசியமாகப்' பணம் வைப்பது? நாளை எப்படி போலீசை - குறிப்பாக - தந்திரசாலி தேவதேவனைத் தவிர்ப்பது....

(தொடரும்)

வடக்கு வாசல் :

# சிறைக்குள் தோண்டப்பட்ட சுரங்கப் பாதை!

திஹார் ஜெயில் பலவித அட்டகாசங்களுக்குப் புகழ்பெற்றது, என்றாலும் கைதிகள் தப்பிச் செல்ல 15 அடி நீளம், ஒன்றரை அடி விட்டம் உள்ள சுரங்கப் பாதை ஒன்று தோண்டப்பட்டுள்ளது என்பது புதிய சாதனை! ஒரு கழிவறையிலிருந்து தொடங்கி, சுற்றுச் சுவரைத் தாண்டி, ஒரு நாலடிச் சாலை வரை சுரங்கப் பாதை செல்கிறது. இது வழியே யாரேனும் தப்பி விட்டால் நெருக்கடி மிகுந்த மேற்கு டெல்லி வட்டாரத்தில் அவர்களைக் கண்டுபிடிப்பது குதிரைக் கொம்புதான்!

நல்லவேளை, அப்படி யாரும் தப்பு முன்னர், சுற்றுச் சுவருக்கு வெளியே காவலிருந்த தமிழ்நாடு ஸ்பெஷல் போலீஸ் படையைச் சேர்ந்தவர்கள் ரோந்து வரும் பொழுது சுரங்கப் பாதையைக் கண்டுபிடித்து விட்டனர். அது சரி, இவ்வளவு தூரம் கைதிகள் சுரங்கம் தோண்டும் வரை சிறை அதிகாரிகள் கண்டுகொள்ளாமல் இருந்தது ஏன்? விசாரணையில் தெரியவரலாம்; அல்லது விசாரணை ஒரு கண் துடைப்பாகவும் முடியலாம்!



## அமைச்சகங்களுக்கு இடையே லடாய்

பிப்ரவரி மூன்றாம் தேதி திங்கட்கிழமை தில்லி சாஸ்திரி பவனில் உள்ள பாஸ்போர்ட் அலுவலகத்துக்குச் சென்றவர்களுக்கு அதிர்ச்சி. அலுவலகம் இழுத்து மூடப்பட்டு சீலும் வைக்கப்பட்டிருந்தது. வீட்டு வசதித் துறை அமைச்சகம், மேற்படி கட்டடத்தைக் காலி செய்யும்படி, வெளிவிவகாரத் துறை அமைச்சகத்தைச் சேர்ந்த பாஸ்போர்ட் அலுவலகத்துக்கு எவ்வளவோ முறை சொல்லியும் அவர்கள் கேட்கவில்லையாம். கடைசியில் ஒரு வார கெடு கொடுத்து, கெடு முடிந்த அன்று அந்த அலுவலகத்தை இழுத்து மூடிச் சீல் வைத்து விட்டார்கள்.

இது ஒருபுறமென்றால், சாஸ்திரி பவன் பக்கத்தில் உள்ள நிர்மாண் பவனிலிருக்கும் வீட்டு வசதித் துறை அமைச்சக இயக்குனர் அலுவலகத்தில் மற்றொரு 'திடுக்' சம்பவம். காலை அலுவலகத்தைத் திறந்தவர்களுக்குத் தலையும் புரியவில்லை காலும் புரியவில்லை. எல்லா கோப்புகளும் கன்னாபின்னா என்று உதறப்பட்டு, பேப்பர்கள் தஸ்தாவேஜுகள் எல்லாம் சுக்குநூறாகக் கிழிபட்டுக் கொண்டிருந்தன. கிழித்துக் கொண்டிருந்தவர்கள் யார் தெரியுமா? குரங்குகள்!

## "டாப்ஸீக்ரட்" தாளில் கடலைப் பொட்டலம்!

தேநீர் சப்ளை செய்த காண்டீன் பையன் பில்கள் கொடுத்தது ஒரு துண்டுக் காகிதத்தில். சாதாரண காகிதமா? மிகவும் அந்தரங்கமாகப் பாதுகாக்கப்பட வேண்டிய எச்.பி.ஜே. (HBJ) பைப் லைன் திட்டத்தின் வரைபட நகல்களைக் கத்திரித்து அதன் பின்புறத்தை பில் புக்காகப் பயன்படுத்தியிருந்தான். காஸ் அதாரிட்டி ஆஃப் இந்தியா என்ற அரசுத் துறை அதிகாரிகளுக்கு அதிர்ச்சி. மிரட்டியதில் தெரிய வந்த தகவல் : அங்கேயுள்ள வேறு ஒரு அதிகாரி சுமார் இரண்டு சாக்குமூட்டைகளில் அடைக்கப்பட்ட மேற்படி புளூபிரிண்ட்களை வெளியில் கடலை விற்பவனுக்கு எடைக்குப் போட்டாராம். அதில் காண்டீன் முதலாளி நான்கு அடித்துக் கொண்டு வந்தாராம். அந்தத் திட்டத்தின் மூலவரைபட நகல்கள் சப்ஜாடா காலி. வரைபடத் துண்டுகளில் கடலைப் பொட்டலங்கள் கட்டப்பட்டும் கூட சம்பந்தப்பட்ட அதிகாரியின் மேல் எந்தவித நடவடிக்கையும் எடுக்கப்பட்டதாகச் செய்தி இல்லை.

- இருள்நீக்கி கணேசன்.

# ரெண்டு பொண்டாட்டி காவல்காரன்

தனியே நடந்து கொண்டு இருக்கும் அந்தச் சென்னைவாசியை மடக்குகிறார் கான்ஸ்டபிள் கந்தசாமி.

''யாரு பாராக்காரரா? வணக்கம் வாத்தியாரே. நா மீர்சாயிப்பேட்டை ஆளுதான். நைட் ஷோ, 'ரெண்டு பொண்டாட்டி காவல்காரன்' - படம் பாத்துட்டு ஊட்டுக்குப் போயிக்கினு கிரேன். சந்தேகப்படறியே?''

''இப்படியெல்லாம் படம் எடுக்க ஆரம்பிச்சுட்டாங்களா?''

''அக்காம் தலைவா. நியாயமாப் பாத்தா மூணு பொண்டாட்டி ரெண்டு காவல்காரன்னு வச்சிருக்கணும். அப்படி கதை.''

''அதென்ன புதுக் கதை? சொல்லு... வீடு போற வரை கேக்கலாமே?''

''ஆனந்த் பாபுதான் ஈரோ. டபுள் ஆக்டிங் கொடுத்துக்கிது. முதது டாணாக்காரன். அடிக்கடி ட்ரான்ஸ்பர்னு மாட்டிக்கினு அல்லாடற அப்பாவி. பர்ஸ்டு பொண்டாட்டி கோவிச்சுக்கினு ஊருக்கு போகச் சொல்ல, எதிர்வூடு ஜில்லுவோட தொடர்பு...

''அய்யய்யோ, இ.பி.கோ. 375, தண்டனை.''

''இரு தலைவா. இங்க அது நடக்கலை. ஜில்லு, அவரோட முத சம்சாரத்துக்கிட்ட கில்லாடிக்கணக்காப் பேசி, அழுது பர்மிசன் வாங்கி ரெண்டாவது பொண்டாட்டியாயிடுது.''

''அடிசக்கை! அப்புறம்?''

''சதாம் உசேன் - ஜார்ஜ் புஷ் கணக்கா ஊட்டுல சண்டைதான். நம்ப ஆளு பாவம் அல்லாடறார்.''

''அப்போ அடுத்த ஆனந்த்பாபு கேரக்டர்?''

''கீட்டு கேள்வி வாத்தியாரே, அவருக்கு நம்ப ஜனகராஜ்தான் மாமா. தன்னோட பொண்ணக் கட்டிக்கணும்னா உருப்படியா ஒரு வேலை தேடிக்கினு வான்னு சொல்ல, தம்பிக்கு ரோஷம். கெளம்பி வந்துட, ரெண்டு ஈரோவும் இடம் மாறிடறாங்களா; ரெண்டு பொண்டாட்டி பத்தாதுன்னு மூணாவது லவ்வரு! சிக்கிலாயி, சரிபண்ணி, படம் முடியுது.''

''வழக்கமான ரெட்டை வேஷக் கதையாத்தான் இருக்கு. ஆனந்த் பாபுவுக்கு ஒத்து வருதா?''

''ஆரம்பிச்சப்ப எனக்கும் அந்த டவுட்டு இருந்திச்சாங்காட்டியும். போவப் போவ தம்பி ஒரு மாதிரியா அட்ஜீஸ் பண்ணிடுது, பரவால்ல.''

''பாட்டு எப்படி?''

''டமுக்கு டப்பாதான். போதும்.''

''ஹீரோயினா யாரு பண்ணியிருக்காங்க?''

''முதல்ல ரோகிணி. அதுக்குக் காதுல கவிட்ச். ரெண்டாவது பொண்டாட்டி வைதேகி, அதுக்கு முது குல கரண்ட்டு. தொப்பி ஆள் அம்பேல். வெய்யில் காலத்துல ஐஸ் வாட்டர் மாதிரி ஜிலுஜிலுப்புத்தான் தோஸ்து. ஜனகராஜ் ஈரோரே... பக்கா வயித்து நோவாயிடுது. செந்திலு - ஒய். விஜயா எருமை மாடு டயலாக் அளவுக்கு மிஞ்சிடுது.''

''மொத்தத்துல படம் எப்படிப்பா?''

''ரெத்தம் ரெத்தமாக் கொட்டற சண்டை இல்லை. நிம்மதி! அப்புறம் டாணாக்காரருக்கு ஏது இத்தினி வசதி அது இதுன்னு கேக்காம பாத்தா ஒரு காமெடி நாடகம் கணக்காக் கீது.''

''அப்படியா? நன்றிப்பா. என் ரெண்டாவது பொண்டாட்டி வீடு வந்திருச்சி. நா வரட்டுமா?''

''ஆ தோஸ்து, நீயுமா?''

''இல்லைப்பா, போலீஸ்காரனுக்கு வேலை தான் முதல் பொண்டாட்டி.''

- சுந்தர்ஜி



"கடலிலிருந்து கரையை நோக்கி வரும் கப்பலின் புகைப் போக்கிதான் முதலில் நம் கண்களுக்குத் தெரியும். பிறகு மெல்ல மெல்லக் கப்பலின் மேல் தட்டுத் தெரியும். கடைசியாகத்தான் கப்பலின் உடல் பகுதியும் நம் கண்களுக்குப் புலப்படும். இதிலிருந்தே நாம் பூமி உருண்டை என்பதைப் புரிந்து கொள்ளலாம்!"

இதுதான் எல்லாப் பள்ளிக்கூட ஆசிரியர்களும் மாணவ, மாணவியருக்குக் காலங் காலமாகச் சொல்லிக் கொண்டு வருகிற உதாரணம். கடலையும் கப்பலையும் பார்க்கும் வாய்ப்புப் பெற்ற மாணவர்களுக்கு வேண்டுமானால் இந்த உதாரணம் ஓரளவுக்குப் புரியலாம். அவர்கள் கூடக் கடற்கரையில் காத்திருந்து, கப்பலின் புகைப்போக்கி தெரிகிறது; மேல் தளம் தெரிந்து, கடைசியில் முழு கப்பலும் கரையை நோக்கி வருவது தெளிவாகத் தெரிகிறது!



அறிவியல் மையம்

# அசர வைக்கும் அறிவியல் மையம்

அடுத்த கண்ணாடிக் கூண்டுக்குச் சென்று விசையை அழுத்தினால், கடலலைகள் எழுகின்றன. அவற்றின் மூலம் ஒரு துக்கினியூண்டு ஜெனரேட்டர் இயங்கி, சிறு சிறு பல்புகளை எரியச் செய்கிறது. ஆக, கடலலைகளின் மூலம் மின்சாரம் தயாரிக்கலாம் என்பதைச் சிறுவர்கள் எளிமையாகப் புரிந்து கொள்கிறார்கள்!

எந்த பாகம் முதலில் தெரிகிறது என்பதை நடைமுறையில் காண்பது அத்தனை சுலபமல்ல.

இந்த நிலையில், எங்கோ ஒரு குக்கிராமத்தில், கடலையும் கப்பலையும் வெறும் படங்களில் மாத்திரமே பார்த்துக் கொண்டிருக்கும் பள்ளி மாணவ, மாணவியருக்கு இந்த உதாரணம் எப்படி மனத்தில் பதியப் போகிறது? பதிய வைக்கிறது, நெல்லையில் அமைந்துள்ள மாவட்ட அறிவியல் மையம். பெட்டி மாதிரி ஓர் அமைப்பு. அதில் சாவித் துவாரம் மாதிரி ஒரு துவாரம். அதற்குள் ஒரு கண்ணை வைத்துக் கொண்டு, பக்கத்திலிருக்கும் விசையை அமுக்கி விட்டால் போதும்! உள்ளே கடல் தெரிகிறது. பிறகு மெல்ல மெல்ல ஒரு

இதே போல், கடலில் அல்லது ஆற்றில் நீர்ச் சுழல் எப்படி ஏற்படுகிறது என்பதை இங்குள்ள இன்னொரு மாடல் உணர்த்துகிறது. ஒரு விசையை அழுத்தினால் போதும், நீரின் மேல் மட்டத்திலிருந்து அடி ஆழம் வரை நீர்ச் சுழல் உருவாகிப் பிரமிக்க வைக்கிறது!

இப்படி எல்லா அறிவியல் விஷயங்களையும் செயல் முறையில் மாணவ,

மாணவியருக்குப் புரிய வைக்கிறது இந்த அறிவியல் மையம். ''இவை மாத்திரமல்ல; ஒரு சிறிய கோளரங்கமும் (inflated planatorium) எங்களிடம் உண்டு!'' என்று எங்களை அழைத்துச் சென்று காண்பித்தார், இந்த மையத்தின் பொறுப்பாளர் இந்திரனில் சன்யால்.

பலூன் மாதிரி ஒன்று. உள்ளே மின் விசிறி மூலம் காற்றைச் செலுத்த, அது உப்பிப் பெரிதாகிறது. அதற்குள் இருக்கும் காற்று வெளியேறாத வண்ணம், அங்கிருக்கும் சிறு வழியின் மூலம், எங்களைத் தவழ்ந்தபடி அதற்குள் அழைத்துச் சென்றார். உள்ளே கும்மிருட்டு. திடீரென்று உள்ளே ஓர் ஆகாயவெளி. நிலவும் நட்சத்திரங்களும் ஜ்வலிக்கின்றன. சப்தரிஷி மண்டலத்தின் துணைகொண்டு எப்படி துருவ நட்சத்திரத்தைக் கண்டுபிடிப்பது போன்றவற்றையெல்லாம் எங்களுக்கு ஒருவர் விளக்குகிறார். நிஜத்தில் பார்ப்பது போலவே இருக்கிறது!

''ஒரே சமயத்தில் இதற்குள் முப்பது பேர் உட்கார்ந்து பார்க்கலாம்'' என்கிறார் இந்திரனில் சன்யால். ''இவை மாத்திரமல்ல; எங்கள் மையத்தில் ஆரம்ப நிலை கம்ப்யூட்டர்கள் கூட இருக்கின்றன. அவற்றையும் மாணவ, மாணவியருக்கு விளக்கிக் காட்டுகிறோம். இன்னொரு விஷயம், இதற்கெல்லாம் நுழைவுக் கட்டணம் கிடையாது. மாணவ, மாணவியர் தங்களிஷ்டம் போல் தாங்களாகவே இங்குள்ளவற்றை இயக்கிப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம்'' என்றார் அவர்.

இங்குள்ள பரந்த பூங்கா கூட வெறும் விளையாட்டிடமாக அமையாமல், சின்னச் சின்ன அறிவியல் உண்மைகளை விளையாட்டு மூலமும் தெரிந்து கொள்ளும்படி அமைந்திருக்கிறது. மத்திய அரசுக்குச் சொந்தமான இந்த அறிவியல் மையம், நடமாடும் கண்காட்சியாக ஒரு சிறிய வாகனத்தை (வேன்) உருவாக்கி கிராமப்புற மாணவ, மாணவியரைத் தேடிச் சென்றும் அறிவியல் விஷயங்களை விளக்குகிறது.

கிராமப்புறப் பள்ளிகள் இந்த அறிவியல் மையத்தை முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் மாநில அரசு ஏதேனும் ஒரு திட்டத்தைச் செயல்படுத்தினால் நல்லது.

- கௌசல்யா

# மூன்றே தொழில்களில் நெல்லையின் மூச்சிருக்கு!

பாலாஜி

திருநெல்வேலி நகரின் மையத்தில் ஐந்து மாடி ஓட்டல் ஒன்று லிஃப்ட் போன்ற சகல வசதிகளுடன் கம்பீரமாக எழும்பி நிற்பதைப் பார்த்தால், நெல்லையில் தொழில் வளம் வேகமாகப் பெருகி வருவது போல் தோன்றும். ஆனால் உண்மை இதற்கு நேர்மாறானது. ஓட்டல்கள் பெரும்பாலும் சுற்றுலாப் பயணிகளுக்கே பயன்படுகின்றன.

நெல்லை மாவட்டத்தோடு தூத்துக்குடி இருந்த போது, நெல்லை மக்கள், தூத்துக்குடியில் பெருகிய தொழில் வளத்தைச் சொல்லிப் பெருமைப்பட்டுக் கொண்டார்கள். இப்போது அதுவும் இல்லை. சிதம்பரனார் மாவட்டம் என பிரிக்கப்பட்டு, தூத்துக்குடி அதன் தலைநகராகி விட்டதால் அந்தப் பெருமையெல்லாம் புஸ்வாணமாகி விட்டது. இப்போது நெல்லை மாவட்டத்தில் உள்ள பெரிய தொழிற்சாலைகள் மூன்றே மூன்றுதான். அம்பையில் இருக்கும் மதுரா கோட்ஸ், தாழையூத்தில் இருக்கும் இந்தியா சிமெண்ட்ஸ், சமீப காலத்தில் துவக்கப்பட்ட வாசுதேவநல்லூர் தரணி சர்க்கரை ஆலை, இவ்வளவுதான்.

நெல்லைப் பகுதியில் தொழில்வளம் பெருகாததற்கு என்ன காரணம்? ''தாமிரபரணியின் தயவால் இங்கே விளைச்சல் அமோகமாக இருக்கிறது. விவசாயத்தில் வரும் வருமானத்தைச் சேர்த்துப் பத்திரமாக வைத்துக் கொள்கிறார்களே தவிர, தொழில் துறையில் முதலீடு செய்யத் தயங்குகிறார்கள். இந்த மாவட்டத்தில் கனிம வளச் சத்து குறைவு. கிடைக்கும் சுண்ணாம்புக் கற்களை இந்தியா சிமெண்ட்ஸ் பயன்படுத்திக் கொள்கிறது. நெல் பயிரை அடிப்படையாக வைத்துத் தொழில்களை ஆரம்பிக்கலாம். குறிப்பாக தவிட்டு எண்ணெய்த் தொழிற்சாலைகளைத் துவங்க வாய்ப்பிருக்கிறது. இங்குள்ள நிலம் எண்ணெய்ப் பனைச் சாகுபடிக்கு ஏற்றதாக இருக்கிறது என்பதால் பாமாயில் தொழிற்சாலைகளையும் துவங்கலாம். தென்னை வளம் அதிகம் இருப்பதால் தேங்காய் நாரை அடிப்படையாக வைத்தும் பல சிறு தொழில்கள் துவக்கலாம்'' என்கிறார் நெல்லையைச் சேர்ந்த கைலாஷ் சுப்பிரமணியன்.

இதுபற்றித் தமிழ்நாட்டிலேயே மிகப் பழமையான நெல்லை வர்த்தக சபை, என்ன செய்து கொண்டிருக்கிறது? அவர்கள் இப்போது விழித்துக் கொண்டு, தொழில்கள் துவங்க வேண்டிய அவசரத்தையும் அவசியங்களையும் விளக்கிக் கருத்தரங்குகள் நடத்திக் கொண்டிருக்கிறார்கள்.

''எங்களுக்கு ரசாயனத் தொழிற்சாலைகள் தேவையில்லை. காரணம், அதில் உப தொழில்கள் வளர வாய்ப்பில்லை. திருச்சியிலுள்ள BHEL மாதிரி மெக்கானிக்கல் அடிப்படையிலான தொழிற்சாலைகள் உருவானால்தான் அவற்றை ஒட்டி உப தொழில்களும் தழைத்தோங்கும். மாவட்டம் ஒரு கடைக் கோடியில் இருப்பதால்,

தொழில் துவங்குபவருக்குப் பல சிரமங்கள் இருப்பதை நாம் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். போக்குவரத்து ஒரு பெரிய பிரச்னை. மூலப் பொருட்களை வாங்க மட்டுமல்ல, உற்பத்தி செய்த பொருட்களை விற்பதற்கும், சென்னைக்கும் அதற்கப்பால் உள்ள இடங்களுக்கும் தான் செல்ல வேண்டும். தூரம் அதிகம் என்பதால் உற்பத்திச் செலவு அதிகமாகும். மற்றவர்களுடன் போட்டி போட முடியாது.

''மல்லிகைப் பூவில் இருந்து வாசனை எண்ணெய் எடுத்து வெளிநாடுகளுக்கு அனுப்பும் தொழிற்சாலை ஒன்று இங்கே ஆரம்பிக்கப்பட்டது. ஆனால் போக்குவரத்து மற்றும் மார்க்கெட்டிங் பிரச்னைகளால் வெற்றிகரமாக நடக்கவில்லை. இதன் காரணமாகத்தான் இன்று தமிழ்நாட்டில் பெரிய தொழிற்சாலைகளை நடத்தும், ஸிம்சன், என்ஃபீல்ட், ஈசன் ஆகிய நிறுவனங்களின் அதிபர்கள் நெல்லை மாவட்டத்தைச் சேர்ந்தவர்கள்தான் என்றாலும் இவர்களில் யாரும், நெல்லை மாவட்டத்தில் தொழிற்சாலைகளைத் துவங்கவில்லை!'' என்று சொல்கிறார் வர்த்தக சபையின் துணைத் தலைவர் டி. பாலாஜி.

இப்போது நாங்குனேரி, சங்கரன் கோயில், தென்காசி போன்ற இடங்கள் அடையாளம் காணப்பட்டு, அங்கு தொழில்கள் துவங்குவோருக்குச் சலுகைகள் உண்டு என மாநில அரசு அறிவித்திருக்கிறது. என்ஃபீல்ட் நிறுவனத்தினர் தங்களுடைய தொழிலகங்களின் அடுத்த விரிவாக்கத்தை நெல்லையில் வைத்துக் கொள்ளலாமா என்றும் யோசித்துக் கொண்டிருக்கிறார்கள்.

தூத்துக்குடி - மணியாச்சி, நாகர்கோயில் - திருவனந்தபுரம் ஆகிய இடங்களை இணைக்கும் அகல ரயில் பாதை இப்போது போடப்பட்டுள்ளதால், நெல்லைப் பகுதியிலிருந்து நாடு முழுவதும் சரக்குகள் அனுப்பவும் பெறவும் ரயில் வசதியும் இருக்கிறது. மேலும் தூத்துக்குடி துறைமுகம் அருகிலேயே இருக்கிறது. அங்கே அனல்மின் நிலையமும் உண்டு. தண்ணீருக்குப் பிரச்னையே இல்லை. இன்னமும் தயக்கம் ஏன்? தொழிலதிபர்கள் தங்கள் பார்வையை நெல்லைப் பக்கமும் திருப்பலாமே!

- திலப்பா

---

**மங்கையர் மலர்** **மார்ச் '92**

# செயின் பறிப்பு அதிகமாகி விட்டதே...!

– சென்னை போலீஸ் கமிஷனர் பதில்

# ஷேர்-ஸ்டை

–விளக்கங்கள்

# மனைவியை அடிக்கும் கணவன்மார்கள்..!



# பாலம்

## தோட்டக் கலைஞர் நட்பு

**தோ**ட்டக் கலையில் அனுபவமும், நுணுக்கமும் கைவரப் பெற்ற Naturalist ஒருவரின் நட்பும், ஆலோசனையும் மிகவும் தேவை. தற்போது என்னிடமுள்ள செடி வகைகளை நன்கு பூக்க வைக்கவும், ரம்மியமாக்கவும், நேரில் ஆலோசனை பெற்று இம்ப்ரூவ் செய்து கொள்ள வேண்டுமென்று எனது நீண்ட நாள் ஆவல்.

- திருமதி எஸ். ஜெயந்தி
17, சோமு செட்டித் தெரு
5 வது சந்து
இராயபுரம்
சென்னை - 600 013.

## முதலீடு தேவையா?

**சு**மாரான முதலீடு செய்து லாபகரமான தொழில் செய்ய, தொழில் திட்டங்கள் கைவசம் வைத்திருப்பவர்கள் கீழ்க்கண்ட முகவரிக்கு எழுதினால், நல்ல தொழிலுக்கு முதலீடு செய்யப்படும். நல்ல தொழில் திட்டம் கைவசம் உள்ளவர்கள் கீழ்க்கண்ட முகவரியோடு தொடர்பு கொள்ளவும்.

- எம். மல்லேஸ்வரன்
42, மாரியம்மன் கோவில் தெரு,
குகை,
சேலம் - 6.

## இரட்டிப்பு லாபம்!

**எ**ன்னிடம் பின்வரும் நூல்கள் உள்ளன :

Encyclopaedia Americana 30 vols
Modern ways of Health 2 vols
You and Your Health 3 vols
Medicine and Health 4 vols

இவற்றைச் சிறப்பான விதத்தில் பயன்படுத்திக் கொள்ள விரும்புவோருக்கு விற்று விடத் தயாராக உள்ளேன். விற்பனை மூலம் கிடைக்கும் பணத்தை ''உதவும் கரங்கள்'' நிறுவனத்துக்கு நன்கொடையாக அளிக்க எண்ணுகிறேன். எனவே இவற்றை வாங்குவோருக்கு இருவிதமாக மனத்திருப்தி கிடைக்கும்.

- திருமதி பி. வி. ஜானகி
20, வஸந்த நகர்,
கணி ராவுத்தர் குளம்,
பெரிய சேமூர்,
ஈரோடு - 4.

## தேவை வினாத்தாள்கள்!

**நா**ன் +1 படித்துக் கொண்டு வருகின்றேன். இந்த வருடம் +2 படிக்கும் மாணவ - மாணவியரிடம் ஒரு வேண்டுகோள். அவர்களுக்கு இந் நேரம் Revision tests முடிந்து இருக்கும். அந்தக் கேள்விகளையும் காலாண்டு அரையாண்டு வினாத் தாள்களையும் விரைவில் எனக்கு அனுப்பி வைக்குமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறேன். இதனால் நானும், எனது நண்பர்களும் பயன் அடைவோம்.

- கே. எம். ராம் விசுவநாதன்,
மே/பா கே. பி. மகாதேவன்,
மளிகை,மெய்ன் ரோடு,
கன்னிப்பட்டி - 638 505
ஈரோடு (ஆர். எம். எஸ்.)

## கூட்டாசிரியரைத் தேடுகிறேன்

**நா**ன் 35 வருடங்கள் ஆரம்பக் கல்வி முதல் தொழில்நுட்பக் கல்வி வரை பல நிலைகளில் பேராசிரியராகப் பணிபுரிந்து நூற்றுக்கணக்கான கட்டுரைகள் (புத்தகங்கள் உட்பட) எழுதியுள்ளேன். பல்வேறு துறைகளில் வகுப்புகள் நடத்தியுள்ளேன். தவிர, விளையாட்டுகள், சித்திரம், சங்கீதம்,' யோகாசனம் இவற்றிலும் தேர்ந்த பயற்சி பெற்றவன்.

என்னுடன் பலதரப்பட்ட கட்டுரைகள், புத்தகங்கள் எழுத (ஆங்கிலம், தமிழ்) நன்கு உழைக்கக்கூடிய கூட்டாசிரியர்கள் தேவை.

- டாக்டர். டி. ஆர். வி. சுப்பிரமணியம்
17-45/1, ராம்நகர் காலனி
அல்வால் (ALWAL)
செகந்திராபாத் - 500 010.

# தாமிரபரணியை அசுத்தமாக்கும் கட்டபொம்மன் போக்குவரத்துக்கழகம்

'குட்டம் தீர்ந்த துறை' என்று ஒரு துறை. யாரோ ஒரு மன்னனுக்குத் தீராத குஷ்டம் வர, அரண்மனை வைத்தியர்களால் குணப்படுத்த முடியவில்லை. கடைசியில், தாமிரபரணியில் தொடர்ந்து சில நாள் நீராடினால் குஷ்டம் நீங்கும் என்று கேள்விப்பட்டு, அம் மன்னன் தாமிரபரணிக்கு வந்து நீராடினான். அவ்வளவுதான்! சில நாட்களில் குஷ்டம் இருந்த இடம் தெரியாமல் மறைந்து போய் விட்டது! அந்தத் துறைதான் 'குட்டம் தீர்ந்த துறை' என்று அழைக்கப்படுகிறது. அந்த அளவுக்குத் தாமிரபரணி மருத்துவ குணம் வாய்ந்தது.

ஆனால், இன்றைக்கு எல்லாமே தலைகீழ்! அந்தக் 'குட்டம் தீர்ந்த துறை'க்குப் பக்கத்திலேயே கட்டபொம்மன் போக்குவரத்துக் கழகப் பணிமனை. அதிலிருந்து வெளியாகும் பல்வேறு எண்ணெய் கலந்த கழிவு நீர் வந்து, சகட்டு மேனிக்குத் தாமிரபரணியில் கலக்கிறது. இது போதாதென்று, கூடவே நகரத்தின் பல்வேறு இடங்களிலிருந்து சாக்கடைகளும் வந்து கலக்கின்றன. இந்த நிலையில், குஷ்டம் தீருமா? வராமலிருந்தாலே பெரிய விஷயம்!



கே. டி. சி.யின் கழிவுநீர் : சுத்திகரிக்கப்படாமலேயே கலக்கிறது...



இளந்தேவன் சந்திரசேகர்

''இப்படி தாமிரபரணி அசுத்தப்படுத்தப்படுவதை எதிர்த்து 1974-லேயே நான் உண்ணாவிரதம் இருந்தேன். எனது உண்ணாவிரதம் அனைவருடைய கவனத்தையும் கவர வேண்டும் என்பதற்காக, ஆற்றின் நடுவிலுள்ள ஒரு பாறைக்குச் சென்று, அங்கு இருந்தேன்.

''அப்போது நெல்லை வந்திருந்த கலைஞர், பயணியர் விடுதியிலிருந்தபடியே நான் உண்ணாவிரதம் இருப்பதைப் பார்த்தார். பிறகுதான் மூன்று லட்சம் செலவில் மாசுக் கட்டுப்பாட்டு இயந்திரங்கள் வாங்கப்பட்டன. கலைஞர் ஆட்சி இருக்கும் வரை அந்த இயந்திரங்களும் ஒழுங்காக இயங்கின. ஆனால் அதன் பிறகு, கழிவுநீர், இயந்திரங்களின் மூலம் சுத்திகரிக்கப்படாமலேயே ஆற்றுக்குள் வர ஆரம்பித்து விட்டது!'' என்று சொன்னார் பார்வர்டு பிளாக் கட்சியைச் சேர்ந்த இளந்தேவன் சந்திரசேகர்.

''நான் விடுவதாக இல்லை. இதை எதிர்த்துக்

கழுதை மேல் ஊர்வலம், மரத்தின் மேல் உண்ணாவிரதம் என்று விதவிதமான போராட்டங்களை நடத்தினேன். அப்போதும் கே. டி. சி. நிர்வாகம் கண்டுகொள்ளவில்லை. இப்போது நீங்களே தான் பார்த்திருப்பீர்களே, பெட்ரோலிய எண்ணெய் கலந்த கழிவுநீர் அப்படியே வந்து ஆற்றில் கலந்து கொண்டிருப்பதை...'' என்றார் சந்திரசேகர்.



☛ தாமிரபரணி

தாமிரபரணியில் கழிவுநீர் கலந்து அசுத்தப்படுகிறது ஒருபுறம் என்றால், மறுபுறம் அங்கு குளிக்கச் செல்லும் பெண்களிடம் திருட்டு. கரையோரங்களில் முட்புதர்கள் ஏராளமாக மண்டிக் கிடப்பதால், திருடர்களுக்கு ரொம்ப வசதி!

நாங்கள் நெல்லை சென்றிருந்த போது கூட ஒருநாள், பட்டப் பகலில் ஆற்றுக்குக் குளிக்கச் சென்ற பெண்மணியிடம் (ஓய்வு பெற்ற தாசில்தாரின் மனைவி இவர்) நகைகளைப் பறித்துக் கொண்டு திருடன் ஒருவன் ஓட, நல்லவேளையாக அருகிலிருந்த இளைஞர்கள் இதைக் கண்டு, சுமார் ஐந்தாறு கிலோ மீட்டர்களுக்குத் திருடனைத் துரத்திக் கொண்டு ஓடி அவனைப் பிடித்து விட்டார்கள்!

இந்த மாதிரி திருட்டுக்கள் அங்கு அடிக்கடி நடக்கவே, அந்தப் புதர்களை அகற்ற வேண்டுமென்று ஒரு நாள் பெண்கள் ஊர்வலமாகச் சென்று மாவட்ட ஆட்சித் தலைவரிடம் மனுக் கொடுத்தார்கள்.

''புதர்களை அகற்றுவதால் திருட்டு மட்டும்தான் குறையும் என்பதில்லை. இரவில் நடக்கும் சில 'நிழலான' காரியங்களும் குறையும்'' என்கிறார்கள் உள்ளூர்வாசிகள்.

- ப்ரியன்



"என்ன அந்த ஆளு பெரிய தலைவரா? எங்க போனாலும் பின்னோட ஒரு கூட்டம் தொடருதே?"

"பின்னே? பிரபலமான ஸ்கூலில் ப்யூன் ஆச்சே அவர், சும்மாவா!"

- உஷா-கல்யாணராமன்

"எங்க டீச்சருக்குக் கடவுள் பக்தி அதிகம்ப்பா."

"அப்படியா?"

"ஆமாம். நான் ஏதாவது கேள்விக்குப் பதில் சொன்னாக் கூட, "கடவுளே, கடவுளே"ங்கறாங்க!"

- எம். ப்ரியா



# பொன் விழா ஆண்டு : : தங்க நகை பரிசு - 14

**பாலு ஜுவல்லர்ஸ் வழங்கும் ஒரு சவரன் பெறுமானமுள்ள தங்க நகை பரிசு பெறுபவர்:**

நா. துளசி ராமன்,
107/68 மில்லர்புரம்,
தூத்துக்குடி - 628 008



## துணிச்சலான அமைச்சர்!



''ஐ. எம். எஃப் போட்ட எல்லா கண்டிஷனுக்கும் ஒத்துக்கிட்ட நம்ம நிதி அமைச்சர், ஒரே ஒரு கண்டிஷனுக்கு மட்டும் ஒத்துக்க முடியாதுன்னுட்டாரு!''

''என்ன அது?''

''பார்லிமெண்ட்ல பட்ஜெட் உரையை ஐ.எம்.எஃப். பிரதிநிதியே வாசிக்கணும்னு சொன்னதைத்தான்!''

- நா. துளசிராமன், தூத்துக்குடி

# பட்ஜெட் சிரிப்பு!

## விட்டுப் போயிருந்தால் சொல்லுங்கள்!

ஒருவர் : நிதியமைச்சர் இந்த மாதம் ஏதோ பரிசு அறிவித்துள்ளாரே எதற்காக வாம்?

மற்றொருவர் : எல்லாப் பொருள் களின் விலையையும் உயர்த்தி விட்டாராம். ஏதாவது விட்டுப் போயிருந்தால் அதை நிதியமைச்சருக்குத் தெரிவித்தால் ரூ 1000/- பரிசு தருவதாக அறிவித்துள்ளார்.

- கி. கல்யாணி, திண்டுக்கல்.



## பாராட்டுப் பாட்டு

''டீ.வி.யிலே பெரும் புள்ளிகள் வரிசையா நின்னுக்கிட்டு, கோரஸா பட் ஜெட்டை பாராட்டிப் பாடறாங்களே!''

''அவங்க தனித்தனியாக் கருத்துச் சொல்றதை ஒளிபரப்பி அலுத்துப் போயி டிச்சாம்!''

- பி. சீனிவாசவரதன், மதுரை.



## தப்பித்தார்!

''நம்ம நிதியமைச்சர் படா இல்லா டிப்பா! ஒரே கல்லுல இரண்டு மாங்காய் அடிச்சுட்டார். பட்ஜெட்டிலே புதுசா வரியும் சேர்த்துட்டார். விமர்சனத்திலிருந்தும் தப்பிச்சுட்டார்!''

''அதெப்படி?''

''பட்ஜெட்டைப் பற்றி ஏதாவது பேசணும், இல்லை, எழுதணும்னா அதுக்கு 'விமரிசன வரி' கட்டணுமாம்!''

- பி. சிவசங்கர், பெங்களூர்.



அடுத்த இதழில்....

- சாக்லேட் : சுவையான தகவல்கள்
- பிஞ்சுக் குழந்தைகளை வதைக்கும் பள்ளி அட்மிஷன் பரீட்சைகள்!



## பழகிக் கொள் இந்தியனே!

''நிதியமைச்சர் பட்ஜெட்டிலே அதிக வரிகள் போட்டதைக் கூட என்னாலே தாங்கிக்க முடியுது. ஆனா அதற்காக ஒரு ஒப்பீடு செய்தாரே அதைத்தான் தாங்கிக்க முடியலே.''

''அப்படி என்ன ஒப்பீடு செய்தார்?''

''அத்தனை வரிகளையும் சுமந்துக் கிட்டு அலட்டிக்காம வரிக்குதிரை இருக்கிறதே அதைப் போல் இந்தியர்களும் இருக்கப் பழகிக்கணும்னு சொல்லிட்டாரே.''

- என். சங்கர், சென்னை.

திரும்பிப் பார்க்கிறேன் - 22

# காதலிக்க நேரம் உண்டு!

''**கா**தலிக்க நேரமில்லை'' - தலைப்பு மிக வித்தியாசமாக இருந்ததால் பார்ட்னர்களுக்கு உடனே பிடித்துப் போய் விட்டது.

ஒவ்வொரு படத்திலும் ஒரு புதுமை செய்பவன் நான் என்பது உங்களுக்குத் தெரியும். இந்தப் படத்தில் என்ன செய் வது? அந்தச் சமயம் ''கர்ணன்'' படத்தைக் கலரில் எடுத்துக் கொண்டிருந்தார்கள். சமூகப் படம் எதுவும் கலரில் அதுவரை வெளிவந்ததில்லை.

''என்ன வின்ஸெண்ட், அடுத்த படத் தைக் கலரில் தயாரிக்கலாமா?'' என்று கேட்டேன்.

யோசித்தார் வின்ஸெண்ட்.

''என்ன தயக்கம்? இதுவரை பிளாக் அண்டு ஒயிட்டானே எடுத்திருக்கிறோம், என்றா?''

''எனக்குத் தன்னம்பிக்கை இருக்கிறது. அதைவிட உங்களிடம் நம்பிக்கை இருக் கிறது. துணிந்து புதுமுயற்சியில் இறங்கு வோம்'' என்றார் வின்ஸெண்ட்.

முதல் தடவையாக வண்ணப்படம் எடுக்கிறோம் என்பதால் ''கொடாக்'' நிறு வனத்தைச் சேர்ந்த கிருஷ்ணனை டெக் னிகல் ஆலோசகராக வைத்துக் கொண் டோம். கதையைத் தீர்மானித்துப் படப் பிடிப்பும் தொடங்கினோம்.

எப்போதுமே ஈடுபாட்டுடன் பணி புரியும் வின்ஸெண்ட், இப்போது அதிக சிரத்தையுடன் செயல்பட்டார். சிறு சந் தேகம் ஏற்பட்டாலும் தயக்கமின்றிக் கிருஷ்ணனிடம் ஆலோசனை கேட்டுப் பெற்றார்.

முதல் ஷெட்யூல் முடிந்ததும் கலர் பிலிமை பிராஸஸ் செய்யக் கொடுத்தோம். பிரிண்ட் தயாரானதும் போட்டுப் பார்த் தோம். பிரமாதமாக இருந்தது. நெருங்கிய நண்பர்கள் சிலர் பார்த்து விட்டு ரொம்பப் பாராட்டினார்கள்.

டைரக்டர் ஸ்ரீதர்

ஆனால் எனக்குத்தான் திருப்தி யில்லை! சில நாட்கள் கழித்து மறுபடி படம் போட்டுப் பார்த்தேன். நீண்ட நேரம் யோசித்தேன். பிறகு பார்ட்னர்களை அழைத்து, ''படத்தை இதுவரை எடுத்த தோடு நிறுத்தி விடலாம்'' என்று சொன் னேன்.

''ஏன்? ஏன்?'' - நண்பர்கள் அதிர்ச்சி யுற்றுக் கேட்டனர்.

''வின்ஸெண்ட் பிரமாதப்படுத்தியிருக் கிறார். படம் வண்ண ஜாலமாக இருக் கிறது. பாட்டு, இசை, நடிப்பு எல்லாம் சரி. ஆனால் கதை அம்சம் சரியில்லை'' என்றேன். அதாவது, என்னையே குறை கூறிக் கொண்டேன்!

டெக்னிகலாக என்னதான் புதிய முயற்சி என்று செய்து காட்டினாலும் 'படத்தின் வெற்றிக்கு அழுத்தமான கதை தான் அஸ்திவாரம்' என்பது என் அசைக்க முடியாத நம்பிக்கை. அதுவும், 'வண்ணத் தில் முதல் சமூகப் படம்' என்று எதிர்பார்ப் புக்களை வளர்த்த பின், அந்தப் படம் கதை அம்சத்திலும் மனநிறைவைத் தரவேண் டும். இல்லாவிட்டால், ''கலர் கொடுத்து விட்டால் போதுமா?'' என்பது போல் பேச்சுக் கிளம்பி, படம் அடிவாங்கும்.

**நா**ன் விளக்கிச் சொன்ன பிறகு, பார்ட்னர்களும் 'பண நஷ்டமானாலும் சரி' என்று ஒப்புக் கொண்டார்கள். ''காதலிக்க நேரமில்லை'' படம் தாற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டது. அப்படி நிறுத்தி வைத்ததானது தனிப்பட்ட முறையில் எனக்கு ஒரு வசதி செய்து தந்தது. அதாவது எனக்குக் காதலிக்க நிறைய நேரம் கிடைத் தது! ஆம், அப்போதுதான் என் வீட்டில் எனக்குத் திருமண ஏற்பாடுகளைச் செய் தார்கள்!

திருமணம் முடிந்த பின் கோவையில்



காஞ்சனா

செழியனின் திருமணத்துக்காக என் மனைவியோடு சென்றிருந்தேன். அங்கே சிவாஜியின் மிக நெருங்கிய நண்பராகிய முத்து மாணிக்கத்தைச் சந்தித்தோம். நான் டைரக்ட் செய்த ''விடிவெள்ளி'' படத்தை சிவாஜியுடன் இணைந்து தயாரித்தவர் முத்துமாணிக்கம். அந்த நெருக்கம் காரணமாக அவர், நானும் என் மனைவியும் சில நாட்களுக்கேனும் தமது விருந்தினராகத் தமது சொந்த ஊரான வேட்டைக்காரன் புதூருக்கு வந்து தங்கியிருக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அந்த ஊர் பொள்ளாச்சி அருகே உள்ளது. அவர் அழைப்பைத் தட்ட முடியாமல் ஏற்றோம்.

அந்தச் சமயம் நாங்கள் ''பிக்னிக்'' போன ஓரிடம் ஆளியாறு அணைக்கட்டு. அப்போதுதான் புதிதாகக் கட்டப்பட்டிருந்த அணை, மலை சூழ்ந்த ரம்மியமான சூழ்நிலை. அந்த அழகில் என் மனத்தைப் பறிகொடுத்தேன். அந்த நிமிஷமே என் மனத்தில் ஓர் எண்ணம் தோன்றியது.

'இந்த இடத்தை நிலைக்களனாகக் கொண்டு காமெடி கலந்த ஓர் அழுத்தமான காதல் கதை எழுதினால்...? அதைப் படமாகவும் இங்கேயே எடுத்தால்...?' படம் ஸில்வர் ஜூபிலி கொண்டாடுவது போல் அப்போதே கனவு காண ஆரம்பித்தேன்! படத்தின் டைட்டில் மட்டும் மாறவில்லை! அதே ''காதலிக்க நேரமில்லை'' என்ற தலைப்புத்தான்!

ஏற்கெனவே ஒப்பந்தம் செய்திருந்த, (முடிந்து போன முதல் ஷெட்யூலில் நடித்திருந்த) நடிக, நடிகையரைப் பயன்படுத்திக் கொள்ளவும் தீர்மானித்தேன். இவர்களில் பெரும்பாலோர் புதுமுகங்கள். அவர்களை நான் தேர்ந்தெடுத்த விதமே அலாதி!

வைஜயந்தி மாலாவின் குழுவில் நடனம் ஆடிக் கொண்டிருந்த ஓர் இளம் பெண்ணின் புகைப்படத்தை ஒரு நண்பர் என்னிடம் கொண்டு வந்து காட்டினார். பெயர் சாந்தி. முகவெட்டு என்னைக் கவரவே, நேரில் அழைத்து வரச் சொன்னேன். ''மேக் அப் டெஸ்ட்'' திருப்திகரமாக அமைந்தது. ஆனால் உடனடியாக அவரை அறிமுகப்படுத்த சித்ராலயாவில் அப்போது படம் ஏதும் தயாரித்துக் கொண்டிருக்கவில்லை. எனவே சித்ராலயாவில் மாதச் சம்பளம் பெறும் நடிகையாக சாந்தியை ஒப்பந்தம் செய்தேன்.

''தில் ஏக் மந்திர்'' படம் தொடர்பாக அடிக்கடி நான் பம்பாய் சென்று வந்த போது ஒரு சமயம், ஏர்போர்ட்டில் நண்பர் செழியன் ஒரு 'பெண்ணை அறிமுகம் செய்து வைத்தார். ''இவர் வசந்தரா; ஏர் ஹோஸ்டஸ்ஸாகப் பணிபுரிகிறார். சினிமாவில் நடிக்கவும் ஆர்வமாயிருக்கிறார். பயன்படுத்திக் கொள்ள முடியுமா பாருங்கள்'' என்றார். நான் ஏறிய விமானத்தில் வசுந்தராவும் உபசரணைப் பெண்ணாக இருந்து பணியாற்றினார். பம்பாயில் இறங்கு முன்னர் அவரிடம், ''விருப்பமிருந்தால் மேக் அப் டெஸ்டுக்கு வரலாம்'' என்று சொன்னேன். ''ஓ, யெஸ்!'' என்றார் அவர் மகிழ்ச்சியும் நன்றியும் பொங்க.

பம்பாயிலிருந்து நான் திரும்பிய பிறகு வசந்தரா ஃபோனில் நேரம் குறித்துக் கொண்டு ஒரு நாள் வந்தார். மேக் அப் டெஸ்ட்டிலும் தேறினார். ஒப்பந்தமானார்.

சிங்கப்பூரிலிருந்து வந்து திருச்சி கல்லூரியில் படித்தவரான ஓர் இளைஞரை கேமிராமேன் சுந்தரம் எனக்கு அறிமுகம் செய்தார். அந்த இளைஞரின் நடையுடை பாவனைகள் என்னை மிகவும் கவர்ந்தன. அவர்தான் ரவிசந்திரன்.

இம்மூவருமே காதலிக்க நேரமில்லை படத்தில் நடித்தார்கள்; ஆனால் நடிகைகள் விஷயத்தில் மட்டும் ஒரே ஒரு மாறுதல்! பெயர்கள் நவீனமாக இருக்க வேண்டும் என்பதற்காக சாந்திக்கு ''நிர்மலா'' என்றும் வசந்தராவுக்குக் ''காஞ்சனா'' என்றும் புதுப் பெயர்கள் சூட்டினேன்!

''காதலிக்க நேரமில்லை'' - மறு படப்பிடிப்புக்கு எல்லாரும் தயாராயிருந்தார்கள். ஆனால் கதை? அதுதான் சண்டித்தனம் பண்ணிக் கொண்டிருந்தது! எப்படி அதை வசப்படுத்தினேன் என்பது அடுத்த இதழில்.

படம் உதவி: பிலிம் நியூஸ் ஆனந்தன்

**நீங்கள் கேட்டவை - தராசு**

# ஜெ.-பங்காரப்பா சந்திப்பு குறித்து?

● எஸ். சிவகப்பிரமணியம், மயிலாடுதுறை.

? 'தமிழ் நாட்டுக்குத் திட்ட ஒதுக்கீடு, கர்நாடகத்தை விடக் குறைவு' என்று சுட்டிக்காட்டி கிண்டல் செய்தீர்களே, ஜெ. ஆட்சியை; இப்போது உயர்த்தப்பட்டுள்ளதே, பாராட்டுவீர்களா?

! ஆகா. தாராளமாகப் பாராட்டலாமே. திட்ட ஒதுக்கீடு சரியான முறையில் பயன்படுத்தப்பட்டால் இன்னும் அதிகமாகப் பாராட்டலாம்.

● கு. சி. ரவிச்சந்திரன், தங்கமகாபுரி பட்டணம்.

? ராஜீவ் கொலையில் குற்றஞ்சாட்டப்பட்டுள்ள பாக்கியநாதன், தனி கோர்ட்டில் காங்கிரஸ் தலைமை பற்றிக் கொடுத்துள்ள வாக்குமூலம்; மகளிர் காங்கிரஸ் பிரிவு குமுதவல்லியின் வர்மா கமிஷன் வாக்குமூலம் ஆகியவை பற்றி...?



பந்தாடுகிறார்!

! இவர்கள் மட்டுமா, காங்கிரஸ்காரர்களே மாற்று கோஷ்டி காங்கிரஸ்காரர்கள் மீது ராஜீவ் கொலை தொடர்பாகக் குற்றச்சாட்டுக்களைச் சுமத்துகிறார்கள். இவையெல்லாம் எவ்வளவு தூரம் உண்மை என்பதை நம்மால் நிர்ணயிக்க முடியாது என்றாலும், தடா சட்டம் பாய்வதில் அரசு வெவ்வேறு கட்சிக்கு வெவ்வேறு அளவுகோல்களை வைத்திருக்கிறது என்பது மட்டும் மிகத் தெளிவாகவே புரிகிறது.

● டி. சந்திரன், ஈரோடு.

? 'மகாமகத்துக்குச் சிறப்பே ஜெயலலிதா மகம் நட்சத்திரத்திலே பிறந்ததுதான்' என்கிறாரே எஸ். டி. எஸ்.?



பங்காரப்பா

! ஆமாம், ஆமாம், அதனால்தான் மகாமகத்தையே 'ஜெயாமகம்' என்று அழைக்க ஆரம்பித்து விட்டார்கள் அ.தி.மு.க.வினர். அடுத்தாற்போல், அங்கே செத்துப் போன சுமார் எழுபது பேருக்கும் ஜெயலலிதாவின் அருளால் மோக்ஷம் கிடைத்தது என்று கூடச் சொல்வார்கள்! வெட்கக்கேடு!

● எம். சந்திரசேகர், மேட்டுமகாதானபுரம்.

? காவேரி பிரச்னை பற்றிய அனைத்துக் கட்சிக் கூட்டத்தில் கலந்து கொள்ளப் போவதில்லை என்று கலைஞர் அறிவித்தது குறித்து?

! பிரதமர், காஷ்மீர் பிரச்னைக்காகக் கூட்டிய அனைத்துக் கட்சிக் கூட்டத்திலும் அவர் கலந்து கொள்ளவில்லை. ஒரு பொறுப்புள்ள எதிர்க்கட்சித் தலைவா நடந்து கொள்ளும்விதம் இதுவல்ல. இது போன்ற கூட்டங்களில் கலந்து கொண்டு, ஆக்கபூர்வமான யோசனைகளைக் கூற வேண்டும். ஏற்கப்படுகிறதோ இல்லையோ, மக்களுக்கு அவர் கருத்து தெரியவரும். கலந்து கொள்ளாமலே இருந்து விட்டு, பின்னர், 'அது சொத்தை; இது குழப்பம்' என்று விமர்சிக்கும் போது, அந்த விமர்சனத்துக்கு மரியாதை இல்லாமல் போய் விடுகிறது.

● என். சீத்தாலட்சுமி, பொள்ளாச்சி.

? "பெயருக்குத்தான் நிதி மந்திரி - செக்கில் கையெழுத்துப் போடக் கூட அதிகாரமில்லை" என்று அங்கலாய்க்கிறாரே, நெடுஞ்செழியன்?

! அரசு நிர்வாகத்தில்தான் அப்படி; வீட்டிலுமா!

● என். ரமேஷ், திருப்பாதிரிப்புலியூர்.

? தொலைக் காட்சியில் கவாஸ்கர் வழங்கிய உலகக் கோப்பை கிரிக்கெட் விளையாட்டின் தொகுப்பு நிகழ்ச்சியைப் பார்த்தீர்களா?

! சொல்லாற்றலும் ஞாபக சக்தியும் பரிணமித்தன. பல்வேறு நாட்டு அணிகள் பற்றியும் இத்தனை துல்லியமாக எடை போட்டு வேறு யாராலும் பேசியிருக்க முடியாது - இந்தியாவில்.

● டி. சேகர், திண்டுக்கல்.

? திரைப்படத்தைப் பார்ப்பதால் மக்கள் முன்னேறுகிறார்களா?

! ஓ! கியூவில் கொஞ்சம் கொஞ்சமாக முன்னேறுகிறார்களே, டிக்கெட் கவுண்



☛ ''ஜெயமகம்!''

டரை நோக்கி!

● ஸ்ரீராஜ், பம்பாய்.

? முதலமைச்சரின் தொழில் முன்னேற்றத்துக்கான கொள்கை பற்றி?

! இண்டஸ்ட்ரியல் பாலிஸி நன்றாகத்தான் இருக்கிறது; ஆனால் தொழில் துறைச் செயலாளர்களை அடிக்கடி முதல்வர் பந்தாடிக் கொண்டிருந்தால், கொள்கை எப்படி செயலுருப்பெறும்?



☛ விட்டிலுமா?

● என். முருகேஷ், பெருஞ்சேரி.

? மகாமகத் திருவிழாவுக்கு இவ்வளவு செலவு செய்வது அவசியம் தானா?

! ஜனநாயகத்தில் லட்சோபலட்சம் மக்கள் நம்பிக்கை வைத்துக் கூடும் இடத்தில் அவர்களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து தருவது அரசின் கடமை. மேலும் பயனடையப் போவது கும்பகோணம் நகரம்தானே. செலவாகும் பணம் நேர்மையாகச் செலவிடப்படுகிறதா என்பதுதான் கவனத்துக்குரியது.

● சாமா, சீர்காழி.

? ரிசர்வ் வங்கியில் கட்டுவதற்காகப் பணம் எடுத்துச் சென்ற வங்கி வேனை மறித்து, லட்சக்கணக்கில் சுருட்டிக் கொண்டு ஓடியிருக்கிறார்களே?

! அந்த வங்கி நிர்வாகிகள் போதிய அளவு முன்னெச்சரிக்கையுடன், பாதுகாப்பு உணர்வுடன் நடந்து கொள்ளவில்லை என்பது பிறருக்கு போதனை. கொள்ளை அடித்தவர்கள் திட்டமிட்டுச் செய்திருப்பதானது, நெடு நாட்களாகக் கவனித்து வந்திருக்கிறார்கள் அல்லது உள் கை உதவி இருந்திருக்கிறது என்பதை உணர்த்துகிறது. இது சோதனை. போலீஸார் இன்னும் குற்றவாளிகளைக் கண்டுபிடிக்காதது வேதனை.



☛ ''இது குழப்பம்!''

● எஸ். கே. மூர்த்தி, கும்பகோணம்.

? மைக் டைசன் குற்றவாளி என்று நிரூபிக்கப்பட்டிருக்கிறாரே?

! அவர் மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டு பயங்கரமானது எனில், தாம் நிரபராதி என்று நிரூபிக்க அவர் தந்த சாட்சியங்கள் அதைவிடவும் பயங்கரமானவை! அமெரிக்காவின் முற்போக்குக் கலாச்சாரம் எத்தகைய மானுட இழிவுக்கு வழிவகுக்கிறது என்பதை உணர்த்தி எச்சரிக்கும் நிகழ்ச்சி.

● எஸ். எஸ். மணி, திருவனந்தபுரம்.

? கலைஞரை விட ஜெயலலிதா துணிச்சலான முடிவுகளை எடுக்கிறார் அல்லவா?

! துணிச்சலான முடிவுகள் எப்போதுமே சரியான முடிவுகளாக இருக்கும் என்று கூற முடியாது. நாம் எடை போட வேண்டியது துணிச்சலை அல்ல; திறமையை.



☛ டிவி நிகழ்ச்சி

● இ. சுரேஷ் பாபு, பட்டுக்கோட்டை.

? முதல்வர், பங்காரப்பாவைச் சந்திக்க இசைந்தது பற்றி?

! பிரதமர் பேச்சு வார்த்தைக்கு அழைக்கும் போது ஏற்பதே அரசியல் நாகரிகம். அதே சமயம் நமது நிலையைத் திட்டவட்டமாக எடுத்துக் கூறி, விட்டுக் கொடுக்காமல் இருந்தது புத்திசாலித்தனம். பங்காரப்பா, நடுவர் மன்றத்தின் இடைக்காலத் தீர்ப்பையும் நிறைவேற்றவில்லை; உச்சநீதி மன்றத்தையும் மதிக்கவில்லை; பாதிக்கப்பட்ட ஒரு லட்சம் தமிழர்களுக்கு நஷ்டஈடு தருவதிலும் சுணக்கம் காட்டுகிறார். இத்தகையவருக்கு நாம் மட்டும் ஏன், எதற்காக விட்டுக் கொடுக்க வேண்டும்? 'நீ அவலைக் கொண்டா, நான் உமியைக் கொண்டு வரேன், ரெண்டு பேரும் ஊதுவோம்; பிறகு நான் மட்டும் சாப்பிடுகிறேன்' என்கிறார் பங்காரப்பா. உன் பாச்சா பலிக்காதப்பா!

● அ. ஜமால் மொய்தீன், செங்குன்றம். ❑

? பீகாரில் சமீபத்தில் நடந்த வன்முறைச் சம்பவம் குறித்து?

! அரசியல் கட்சிகளுக்குள் குண்டர்களை நுழைய விடுவதில் உள்ள ஆபத்தை வெட்ட வெளிச்சமாக்கும் நிகழ்ச்சி. தாங்கள் பதவிக்கு வர வேண்டும் என்பதற்காகக் குண்டர்கள் படைக்கு ஆதரவு தருகிறவர்கள், பதவிக்கு வந்த பின்னர் அவர்களைக் கட்டுப்படுத்த முடியாமல் தவிக்கிறார்கள். பழிவாங்கலும் படுகொலைகளும் தொடர்கின்றன. அரசு கையைப் பிசைந்து கொண்டு நிற்கிறது!

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
அ. ஜமால் மொய்தீன்,
3A, தர்கா தெரு,
செங்குன்றம், சென்னை - 52.

# "நிரந்தரத் தீர்வுக்கு மக்களின் மனோபாவம் மாறவேண்டும்!"

"நெல்லை - கட்டபொம்மன் மாவட்டம் தனியாகப் பிரிந்த பிறகு, தொழில் துறையில் பின்தங்கிய மாவட்டமாக இருக்கிறதே?" நெல்லை - கட்டபொம்மன் மாவட்டக் கலெக்டர் வேலுவைச் சந்தித்துக் கேட்டோம்.

"உண்மைதான். பெரிய பெரிய தொழிற்சாலைகளை உடனடியாகக் கொண்டு வருவது சாத்தியமில்லை என்கிற நிலையில், விவசாயம் சார்ந்த தொழில்களை ஊக்குவித்து வளர்க்க, உடனடி நடவடிக்கைகள் எடுத்து வருகிறோம். தென்னை அதிகம் என்பதால் கயிறு திரிக்கும் தொழிற்சாலை உருவாகவுள்ளது. டானிடா திட்டத்திற்காக 6.3 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. பணம் வைத்திருப்பவர்களில் பலர், அதை வட்டிக்கு விட்டு விட்டு நிம்மதியாகச் சம்பாதிப்பதில்தான் குறியாக இருக்கிறார்கள். அவர்களெல்லாம் சிறு சிறு தொழில்களைத் துவங்கினால் பலருக்கும் வேலை வாய்ப்புக் கிடைக்கும் என்பதை எடுத்துச் சொல்லி, அவர்களின் மனோபாவத்தை மாற்றுவதற்கான கருத்தரங்குகளையும் அடிக்கடி நடத்தி வருகிறோம்."

"இந்த மாவட்டத்தில்தான் அடிக்கடி ஜாதிச் சண்டைகள் நடப்பதாகப் பலரும் சொல்கிறார்களே?"

"அது ஜாதிச் சண்டை என்று சொல்வதை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். வெறும் கோஷ்டிச் சண்டைகள் அவை. சட்டத்தின் மூலம் அவற்றை ஒடுக்குவது ஒருபுறமென்றாலும் அது நிரந்தரத் தீர்வாகாது என்பதால், மக்களின் மனமாற்றத்தின் மூலம் தீர்வு காண்பதற்கான வழிமுறைகளையும் செய்து வருகிறோம். உதாரணத்திற்கு ஒன்று சொல்கிறேன். சென்ற ஆண்டு கங்கைகொண்டானில் ஒரு கொலை நடந்தது. அங்கு வெறும் சட்ட நடவடிக்கைகளோடு நிறுத்தி விடாமல், தொண்டு நிறுவனங்களின் துணைகொண்டு, கோயிலைச் சுத்தப்படுத்துதல், விளக்கு வசதிகள், நூலக வசதி என்று பல சேவைகளைச் செய்து, உள்ளூர் மக்களையும் அதில் பங்கேற்கச் செய்தோம். சர்வ சமயக் கூட்டங்கள், மைய மாநில அரசுத் துறைகளின் மூலம் பல்துறை விளக்க முகாம்கள், மருத்துவ முகாம்கள் என்று பல்வேறு பணிகளைச் செய்த போது, மக்களின் மனோபாவங்கள் சாத்வீக முறைக்கு மாறியதைக் கண்கூடாகக் கண்டோம். இவற்றை இப்போது மாவட்டம் முழுமையிலும் செய்து வருகிறோம். இதுபோன்ற பணிகள் இப்போது வாரத்தில் ஆறு நாட்கள் நடந்து வருகின்றன."

"அறிவொளி இயக்கம் எப்படி?"

"இந்த மாவட்டத்தில் அறுபது சதம் மக்கள் எழுத்தறிவு பெற்றவர்கள். மீதியுள்ள நாற்பது சதத்தில், சரிபாதி பெண்களே. பெண் கல்விக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கிறோம். அதோடு இங்குள்ள மக்களில் 85 சதம் பேர் ஏதாவதொரு நோயால் பாதிக்கப்பட்டவர்களாகத்தான் இருக்கிறார்கள் என்பது மருத்துவ முகாம்களின் மூலம் தெரியவந்ததால், மருத்துவ வசதிக்கும் முக்கியத்துவம் தருகிறோம்."

"மனுநீதி நாட்களில் உங்களுக்கு வரும் மனுக்களில் எப்படிப்பட்ட குறைகள் வருகின்றன?"

"பெரும்பாலும் குடிநீர், சாலை வசதி, விளக்கு வசதி, போக்குவரத்து வசதி போன்றவைதான் வருகின்றன. இவையெல்லாம் மக்களின் நியாயமான கோரிக்கைகள் என்பதால் உடனுக்குடன் நடவடிக்கை எடுக்கிறோம்."

"தாமிரபரணி ஆற்றங்கரையில் முட்புதர்கள் மண்டிக் கிடப்பதால், அங்கு குளிக்கவோ, துவைக்கவோ செல்லும் பெண்களிடம் நகைப் பறிப்பு ஏற்படுவதாகச் சொல்கிறார்கள்."

"என் அலுவலகம் அமைந்துள்ள கொக்கிரகுளம் பகுதியிலேயே அப்படியொரு நகைப்பறி நடந்திருக்கிறது.



உடனடியாக அப்புதர்களை அகற்றுவதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன. அதோடு, அங்கு விளக்கு வசதி செய்யவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. போலீஸ் காவலையும் உஷார் படுத்தியிருக்கிறோம்.''

''தாமிரபரணியில் சாக்கடைகள் கலந்து அசுத்தப்படுத்தப்படுவது ஒருபுறமிருக்க, கட்டபொம்மன் போக்குவரத்துக் கழகப் பணிமனையிலிருந்து வெளிவரும் எண்ணெய் கலந்த கழிவு நீரும் ஆற்றிலேயே கலக்க விடப்பட்டு அசுத்தப்படுத்தப்படுகிறது.''

''இல்லையே. அவர்களிடம் சுத்திகரிப்பு வசதியிருக்கிறது. அந்த ட்ரீட் மெண்ட் பிளாண்ட் மூலம் சுத்தப்படுத்தப்பட்ட பிறகுதான் ஆற்றில் கலக்க விடப்படுகிறது.''

''நேற்று நாங்கள் பார்த்த போது, எண்ணெய் கலந்த கழிவு நீர்தான் ஆற்றில் கலந்து கொண்டிருந்தது.''

''அப்படியா! இதோ ஒரு நிமிஷம்...'' (டெலிபோனை எடுத்து, கட்டபொம்மன் போக்குவரத்துக் கழக எம்.டி.க்கு எண்களைச் சுழற்றிப் பேசுகிறார்.) ''ஹலோ... உங்கள் பணிமனையின் கழிவுநீர் சுத்திகரிக்கப்படாமலேயே ஆற்றில் கலக்க விடப்படுவதாகக் கேள்விப்படுகிறேனே உண்மையா?'' என்று கேட்கிறார் கலெக்டர் வேலு.

''என்ன.. இரண்டு நாட்களாக ட்ரீட் மெண்ட் பிளாண்ட் வேலை செய்யவில்லையா? உடனடியாகச் சரிசெய்யுங்கள். நான் வந்து பார்ப்பேன்...'' என்று சொன்ன கலெக்டர் டெலிபோனில் நடந்த உரையாடலை மீண்டும் நம்மிடம் விளக்குகிறார்.

''எல்லா ஊர்களையும் போலவே இங்கே ஆட்டோக்களுக்கான கட்டணப் பிரச்னை. கன்னாபின்னாவென்று கேட்கிறார்கள்...''

''உண்மைதான். அதனால் இந்த இடத்திலிருந்து, இந்த இடம் வரையிலான ஆட்டோ கட்டணத் தொகை இவ்வளவு தான் என்று போர்டுகள் எழுதி முக்கியமான இடங்களில் வைக்க உத்தேசித்திருக்கிறோம்.''

''குற்றாலம், கிருஷ்ணாபுரம் தவிர வேறு சுற்றுலா இடங்களைப் பிரபலப்படுத்தி மக்களை ஈர்க்கும் திட்டம் உள்ளதா?''

''இருக்கிறது. மணிமுத்தாறு அணை, பாபநாசம், முண்டந்துறை வனவிலங்குச் சரணாலயம், கூந்தகுளம் பறவைகள் சரணாலயம் என்று பல இடங்கள் உள்ளன. குற்றாலத்தை மட்டும் பார்க்க வருபவர்களைக் கவர்ந்து, இந்த இடங்களையும் பார்க்குமாறு செய்யவுள்ளோம்.''

''சென்ற மே மாதத்தில் நெல்லையப்பர் கோயிலிலுள்ள வெள்ளித் தேர் எரிந்தது, தற்செயலான விபத்து அல்ல என்கிறார்களே?''

''நிச்சயமாக அது விபத்து அல்ல. அதற்கொரு பின்னணி இருக்க வேண்டும். அது பற்றி விசாரணை நடந்து கொண்டிருக்கிறது...'' என்றார் கலெக்டர்.

**- இளங்கோவன்**

அட்டையிலுள்ள காந்தி மதியம்மன் ஆலய வண்ணப்படம் : **தம்பையா.**
மற்ற வண்ணப்படங்களும், நெல்லை தொடர்பான மற்ற படங்களும் : **ராஜன்**
அட்டைப் படச் சிறுமி :
**ஸ்வரம் பாடும் அனுஷா**

வட்டமேஜை

# இந்தக் கையில் பதில்!

## வெளியேற்றுவது யார்?

◆ கட்சிகளின் வன்முறை மாறாதவரை ஜனநாயகம் என்பது வெறும் போர்வை என்பதைத் தங்கள் தலையங்கம் தெளிவாக விளக்கியது. கட்சிகளின் தலைவர்களே நட்டுவாக்களிகளாக இருக்கும் போது, தேள்களை வெளியேற்றுவது யார்...?

தருமபுரி, எம். மனோகரன்.

## சிறுகதையில் பதில்...

◆ தங்கள் தலையங்கத்திற்கான பதில், 'பிழைத் திருத்தம்' என்ற சிறுகதை மூலமாகக் கிடைக்கிறது. தலைவர்கள், தாங்கள் ஒழுக்கத்தில் முன்மாதிரியாக இருந்தால், தொண்டர்களும் கட்டுப்பாடு உள்ளவர்களாக இருப்பார்கள்.

மதுரை - 7, எஸ். திருமலை.

## உயிரோட்டம் இருக்கிறது!

◆ ஓவியர் அல்ஃபான்ஸோ, எம். ஜி. ஆர். படத்தை வரையும் போது, உருவத்தை எழுதினால் மட்டும் போதாது. அவர் மனத்தையும் முகம் பிரதிபலிக்க வேண்டும் என்ற நோக்கோடு வரைந்த எம். ஜி. ஆர். படம் உண்மையிலேயே உயிரோட்டமாய் அமைந்துள்ளது. அதோடு அவரது தூய்மையான ஓவியக் கலை எல்லோராலும் பாராட்டும்படியுள்ளது.

லால்குடி, எம். இராஜேந்திரன்.

## சிந்திக்க வைக்கும்!

◆ 'பெற்றோருடன் பேச என்ன இருக்கு!' பெற்றோர்களின் முரண்பட்ட போக்குத்தான் இதற்குக் காரணம். தம்மை விட வயதில் சிறியவனுக்கு என்ன தெரியும் என்ற பெற்றோரின் போக்கும்; தன் மனத்தைப் பெரியவர்கள் புரிந்து கொள்ள முயலவில்லை என்ற குழந்தைகளின் ஏக்கமும்தான் விலகலின் ஆரம்பம். இனிவரும் காலத்தில் இது அதிகரிக்கும் என்ற டாக்டரின் பதில் பெற்றோர்களைச் சிந்திக்க வைக்கும் என்று நம்புகிறேன்.

திருவெண்ணெய்நல்லூர், ஆர். கே. கங்கா சீனிவாசன்.

## தராசு கவனத்துக்கு!

◆ ராஜீவ் காந்தி இறந்து ஒரு வாரம் கழித்து மயிலாடுதுறையில் நடைபெற்ற இரங்கல் கூட்டத்தில் மணிசங்கர், ''இத்தொகுதியை துபாய் போல ஆக்குவேன் என்று கூறியதை வாபஸ் பெற்றுக் கொள்கிறேன். ஏனெனில் எனது நண்பர் ராஜீவ் உயிருடன் இன்று இல்லை. அவர் இல்லாமல் என்னால் முடியாது. எனினும் என்னால் முடிந்ததைச் செய்வேன்'' என்று தெளிவாகக் கூறினார். இதையே எல்லா ஊர்களிலும் சொல்லித் தான் வோட்டு வாங்கி ஜெயித்தார்.

காளி, டி. பி. சுப்ரமணியன்.

## மலரும் நினைவுகள்!

◆ ஏற்கெனவே கல்கியில் வெளியான வைரமுத்துவின் 'சிகரங்களை நோக்கி' பற்றி ஔவை நடராஜனும், ரவி ஆறுமுகமும் விவாதித்தது மலரும் நினைவுகளைப் போல் மணமுள்ளதாக இருந்தது.

கொங்கணாபுரம், வே. செந்தில் குமார்.

## அழகான வெளிப்பாடு!

◆ டி. ராமுவின் 'கடைசி அத்தியாயம்' கவிதை சூப்பர். நாட்டின் அவல நிலையை அழகாக வார்த்தைகளால் வெளிப்படுத்தி விட்டார்.

வீரவநல்லூர், எஸ். ராமசுப்பிரமணியன்.

## அசை போட வைத்தது!

◆ ''உமாவா இப்படி?'' முதல்தரமான கதை. கதையைப் படித்த பிறகு வெகு நேரம் மனத்தில் அசைபோட்டுக் கொண்டிருந்தேன்.

தக்கோலம், அ. முஸ்தபா.

## அங்கு இல்லை!

◆ கல்கி 16.2.92 இதழ் பக்கம் 14ல் உள்ள ஜோக்படி திருவனந்தபுரத்தில் உயர்நீதி மன்றம் இல்லை. கேரளாவில் உயர்நீதி மன்றம் உள்ள இடம் எர்ணாகுளம்.

கஞ்சிரகோடு, வி. மேரி விமலா.

## அப்படி அல்ல

◆ டிப்ஸ் பகுதியில் Carburator என்று தவறாக அச்சாகியுள்ளது. Carburettor என்று இருக்க வேண்டும்.

சென்னை, கேஸி.

பாரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600 032. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2344145; சர்குலேஷன் மானேஜர் : 2344190; விளம்பரம் - சந்தா: 2344157; டைரக்டர்: 2341543.
ஆண்டுச் சந்தா - உள்நாடு: ரூ. 156/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு: ரூ. 78/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 200/- விமானத் தபால்: ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka